பக்கங்கள்: இருபத்துநான்கு



யாழ். உதயன்

26 வருட வரலாறு கொண்ட யாழ்.உதயன் இப்போது கடைகளிலும்

சுடர் 01 வள்ளுவர் ஆண்டு 2042 தை 06 வெள்ளிக்கிழமை (20.01.2011) UTHAYAN - A LIVELY NATIONAL TAMIL WEEK கதிர் : 27

# இந்தியா விரைகிறது கூட்டமைப்பு பிரதமர் மன்மோகனுடனும் சந்திப்பு

## கிருஷ்ணாவுடனான பேச்சுக்களை அடுத்து சம்பந்தன் தலைமையில் குழு பயணம்



கொழும்பு, ஜனவரி20

அரசு - தமிழ்த் தேசியக் கூட்டமைப்புப் பேச்சுக்கள் முடங்கியுள்ள நிலையில், கூட்ட மைப்பினர் இந்தியாவுக்கு உத்தியோகபூர்வ பயணம் மேற்கொள்ளத் தயராகி வருகின்றனர். அநேகமாக அடுத்த மாத நடுப்பகுதியில் இந்தப் பயணம் இடம்பெறும் என்று அறிவிக்கப்படுகிறது.

ஏற்கனவே பல தடவை புதுடில்லிக்குச் சென்ற கூட்டமைப்பினர், அந்நாட்டு பிரதமர் மன்மோகன் சிங்கைக் கூட்டாகச் சந்திக்க நேரகாலம் - வாய்ப்பு கிட்டவில்லை. தலைவர் சம்பந்தன் மட்டுமே ஒருதடவை மன்மோகனைச் சந்தித்திருந்தார். ஆனால் இம்முறை கூட்டமைப்பினர் மன்மோகன் சிங் மற்றும் அரசியல் தலைவர்களை சந்தித்து பேச்சு நடத்துவர் என்று கொழும்பில் இராஜதந்திர வட்டாரங்கள் நம்பிக்கை வெளியிட்டுள்ளன.

அதேசமயம் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் தலைவர் இரா. சம்பந்தன் தலைமையிலான நாடாளுமன்ற உறுப்பினர் குழுவொன்றே விரைவில் இந்தியா விரைகின்றது என்று பெயர் குறிப்பிட விரும்பாத இந்திய இராஜதந்திரி ஒருவர் நேற்று கொழும்பில் தெரிவித்தார். இதற்கான ஏற்பாடுகளை இந்திய வெளிவிவகார அமைச்சு மேற்கொண்டு வருகின்றது என்றும் அவர் குறிப்பிட்டார். இலங்கைக்கு உத்தியோகபூர்வ பயணமொன்றை மேற்கொண்ட இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா, தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை கடந்த 16ஆம் திகதி சந்தித்துப் பேச்சு நடத்தினார். இதன்போதும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் இந்திய விஜயம் குறித்து கருத்துப் பரிமாறல்கள் இடம்பெற்றுள்ளன என்றும் தெரியவருகிறது.



ஐ.நா. மனித உரிமைப் பேரவைக் கூட்டத்தொடர் மார்ச் மாதம் ஜெனி வாவில் நடைபெறவுள்ள நிலையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை இந்தியா அழைத்துப் பேசவுள்ளமை கொழும்பு அரசியல் வட்டாரத்தில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

10 சிங்கப்பூராக மாறுமா இலங்கை?



16 முன்னேறியது நெப்போலியன் படை



17 இறுதி நாள்கள்

# அடிபணிந்தது அரசு காணிப் பதிவு வாபஸ்

கொழும்பு, ஜன. 20

வடக்கு - கிழக்கில் காணிகளைப் பதிவு செய்வது தொடர்பாகக் காணி அமைச்சு விடுத்திருந்த சுற்றறிக்கையை வாபஸ் பெறுவதாக அரசு அறிவித்திருக்கிறது. இந்தச் சுற்றறிக்கையை எதிர்த்து தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் எம்.ஏ.சுமந்திரன் தாக்கல் செய்த வழக்கில் அடிபணிந்த அரசு, சுற்றறிக்கையைத் தான் வாபஸ் பெற்றுக் கொள்வதாக மேல்முறையீட்டு நீதிமன்றில் நேற்றுத் தெரிவித்தது.

வடக்கு - கிழக்கு மாகாணத்தில் உள்ள அரச காணிகள் மற்றும் தனியார் காணிகள் அனைத்தையும் பதிவுசெய்யுமாறு (19ஆம் பக்கம் பார்க்க)



# தேடப்படுபவர் இட்டார் ஆணை தேடிவந்தவர் கொன்றார் தமிழை

## அரியாலையில் அரங்கேறிய கிருஷ்ணலீலை

யாழ்ப்பாணம், ஜன.20

தமிழகம், சூளைமேட்டுச் சூட்டுச் சம்பவம் தொடர்பான வழக்கில் இந்தியாவில் தேடப்படுபவரான அமைச்சர் டக்ளஸ் தேவானந்தாவின் 'அன்புக் கட்டளைக்கு' அடிபணிந்து அரைகுறைத் தமிழிலும் இடையே புரியாத ஒரு மொழியைக் குழைந்தும் உரையாற்றினார் இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா.

அரியாலையில் இந்திய நிதி உதவியுடன் அமைக்கப்பட்ட வீடுகளைக் கையளிக்கும் நிகழ்விலேயே இந்த 'கிருஷ்ண லீலை' நிகழ்ந்தது.

அத்தோடு யாழ்ப்பாணத்தில் கடந்த புதன் கிழமை கிருஷ்ணாவோடு ஒட்டி உறவாடியபடியே அமைச்சர் டக்ளஸும் நிழலாகப் பின்தொடர்ந்தார். ஆனாலும் கிருஷ்ணா வும் அதற்கு எதிர்ப்பு ஏதும் தெரிவிக்கவில்லை. கிருஷ்ணாவின் கவனத்தை தன் பக்கம் ஈர்க்கும் முகமாக, ''இப்போது தமிழில் அமைச்சர் கிருஷ்ணா உரையாற்றுவார்'' என்று அறிவித்தார் டக்ளஸ். சபை நாகரீகம் கருதி அமைச்சரின் அன்புக் கட்டளைக்கு அடிபணிந்து ஒரு சில நிமிடங்கள் தனக்குத் தெரிந்த தமிழில் கிருஷ்ணா உரையாற்றினார்.

இதேவேளை ''இந்தியாவில் ஒரு வழக்கில் தேடப்படும் நபர் ஒருவருடன் இந்திய அரசின் முக்கிய அமைச்சர் ஒருவர் கூடிக்குலாவிய விடயம் கண்டிக்கத்தக்கது. இந்தியாவின் இறையாண்மையை மதிக்காமல் ஒளிந்திருக்கும் ஒருவருடன் இவ்வாறு அமைச்சர் உறவாடியமை இந்தியாவுக்கே அவமானம்'' அக்கினிப்புயல் சீமான் உதயனுக்குத் தெரிவித்தார்.



*Contact :*
**Yarl Uthayan publication inc.**
**503-7700 Hurontario st.**
**Suite -52**
**Brampton**
**Ontario L6Y 4M3**
**Canada.**
TEL. : 1 416 800 7346
: 1 416 857 9022
Toll free : 1 800 886 9202
Fax : 1 647 931 7373
E-mail : canada@uthayan.com

# கிளிநொச்சியில் பொறியியல் பீடம்

கொழும்பு,ஜன.20

யாழ். பல்கலைக்கழகத்தின் பொறியியல் பீடத்தைக் கிளிநொச்சியில் அமைக்க அமைச்சரவை அனுமதி அளித்துள்ளது.

இதுகுறித்த அமைச்சரவைப் பத்திரத்தை உயர்கல்வி அமைச்சர் எஸ்.பி. திஸாநாயக்க சமர்ப்பித்திருந்தார். இதன்படி கிளிநொச்சி - அறிவியல் நகரில் யாழ். பல்கலைக்கழகத்தின் பொறியியல் மற்றும் விவசாய பீடம் என்பன இயங்கவுள்ளன. கிளிநொச்சியில் பொறியி யல் பீடத்திற்கான கட்டடத்தை புனரமைப்புச் செய்ய 393.79 மில்லியன் ரூபா நிதி ஒதுக்கப்பட்டுள்ளது.

# நகரில் புதிய பொலிஸ் நிலையம் கட்டுமானம் அடிக்கல்லுடன் நிறுத்தம்

## இடத்தை உரிமை கோருகிறது தொல்பொருள் திணைக்களம்

யாழ்ப்பாணம்,ஜன.20

யாழ். துரையப்பா விளையாட்டு அரங்குக்கு அருகில் உள்ள காணியில் அமைக்கப்படவுள்ள புதிய பொலிஸ் நிலையத்துக்கான கட்டுமான வேலைகளை உடனடியாக இடைநிறுத்துமாறு தொல்பொருள் திணைக்களம் அறிவித்துள்ளது. இதனால் அடிக்கல் நடப்பட்ட நிலையில் வேலைகள் அனைத்தும் நிறுத்தப்பட்டன.

இதுதொடர்பில் மேலும் தெரிய வருவதாவது:-

1984 ஆம் ஆண்டு தமிழீழ விடுதலைப் புலிகளால் தகர்க்கப்பட்ட யாழ். பொலிஸ் நிலையத்தை மீளவும் அதே இடத்தில் 294 மில்லியன் ரூபா செலவில் அமைக்கும் பொருட்டு கடந்த 12 ஆம் திகதி அடிக்கல் நடப்பட்டது.

இருப்பினும் தற்போது குறித்த இடம் தமக்குச் சொந்தமானது எனத் தெரிவித்து, அந்த இடத்தில் மேற்கொள்ளப்படும் கட்டடப் பணிகளை இடைநிறுத்துமாறு தொல்பொருள் திணைக்களம் அறிவித்துள்ளது.

யாழ்ப்பாணக் கோட்டை தொல் பொருளியல் சின்னமாக பிரகடனப்படுத்தப்பட்டு அதன் பராமரிப்புப் பணிகள் தொல்பொருள் திணைக்களத்திடம் வழங்கப்பட்டுள்ளன.

தொல்பொருள் சின்னமாகப் பிரகடனப்படுத்தப்பட்ட இடத்தில் இருந்து 400 மீற்றர் சுற்று வட்டாரத்தினுள் அமையும் பிரதேசம் முழுவதும் தொல்பொருள் திணைக்களத்துக்கு சொந்த மானது என்பதால் குறித்த இடத்தில் பொலிஸ் நிலையம் அமைக்க முடி யாது என்று தொல்பொருள் திணைக் களம் சுட்டிக்காட்டி உள்ளது.

இந்த விடயம் தொடபில் யாழ். பொலிஸ் நிலைய தலைமை பொலிஸ் அதிகாரி சமன் சிகேரவிடம் தொடர்பு கொண்டு கேட்டபோது; குறிப்பிட்ட அந்த இடத்தில் பணிகளை மேற் கொள்ள வேண்டாம் என்ற தடை உத்தரவு தமக்குக் கிடைக்கப் பெற்றுள்ளது. இது தொடர்பில் நாம் சட்ட நடவடிக்கை எடுப்பது குறித்து ஆலோசித்து வருகிறோம்.

பொலி நிலையத்துக்குச் சொந்தமான காணியிலேயே நாம் பணிகளை தொடங்கி உள்ளோம். தொல்பொருள் திணைக்களம் கூறுவதைப் பார்த்தால், யாழ். துரையப்பா விளையாட்டு மற்றும் பண்ணையில் உள்ள ரெலிக்கொம் போன்றவையும் அமைக்கப்பட்டிருக்க முடியாது - என்றார்.

# வீதி அகலிப்புப் பணிகளுக்காக வந்தவர்கள் வீடுகளில் சோதனை!

தென்மராட்சி,ஜன.20

வீதி அகலிப்புப் பணிக்கு வந்த தென்னிலங்கை வாசிகள் வீடுகளில் பரிசோதனை நடத்துவதா? இதற்கு யார் அனுமதி கொடுத்தது? என்று கேள்வி எழுப்பியுள்ளனர் சாவகச்சேரி மக்கள்.

சாவகச்சேரி நகர்ப் பகுதி யில் உள்ள கிராமமொன்றில் மதுபோதையில் சென்ற மூவர் அந்தப் பகுதியில் மக்களை அச்சுறுத்தி அடையாள அட்டைகளைப் பரிசோதனை நடத்தியுள்ளனர்.

இராணுவப் புலனாய்வு பிரிவைச் சேர்ந்தவர்கள் எனத் தெரிவித்ததால் மக்கள் அச்சத்துடன் அடையாள அட்டைகளைக் காண் பித்தனர்.

இவர்களின் நடவடிக்கையில் சந்தேகம் கொண்ட கிராம இளைஞர்கள் சாவகச்சேரி பொலிஸாருக்குத் தகவல் கொடுத்த பின்னர் புலனாய்வுத் துறையினர் எனக் கூறியவர்களிடம் துருவித் துருவி சிங்களத்தில் விசாரித்தனர்.

இளைஞர்களின் கேள்விகளுக்குப் பதிலளிக்க முடியாத நிலையில் இருவர் அங்கிருந்து ஓட்டம் எடுக்க மற்றவரை பிடித்துப் பொலிஸாரிடம் ஒப்படைத்தனர்.

பொலிஸார் சிலரிடம் விசாரணை நடத்திய போது சாவகச்சேரி பெரிய அரசடிப் பகுதியில் நடைபெறும் வீதி அகலிப்புப் பணியில் ஈடுபட்டுள்ளதாகவும் மதுபோதையில் கிராமத் துக்குச் சென்றதாகவும் தெரிவித்துள்ளார்.

இந்த நபரைக் கைது செய்த பொலிஸார் சாவகச்சேரி ஆதார வைத்திய சாலையில் சிகிச்சைக்காக அனுமதித்துப் பின்னர் பொலிஸ் நிலையத்துக் குக் கொண்டு சென்றனர்.

# பேச்சுத் தடைப்பட்டுள்ளபோதும் தீர்வு வரும் என நம்பும் இந்தியா

## உண்மையான அதிகாரப் பகிர்வுக்கு யாழ்ப்பாணத்தில் வலியுறுத்து



யாழ்ப்பாணம்,ஜன20

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடனான பேச்சை முன்னறிவித்தல் ஏதுமின்றி இலங்கை அரசு இடை நிறுத்தியுள்ள நிலையிலும் அந்தப் பேச்சின் ஊடாக அர்த்தமுள்ள அதிகாரப் பகிர்வு ஒன்று எட்டப்படும் என்று இந்தியா நம்பிக்கை வெளியிட்டுள்ளது.

''நடந்து கொண்டிருக்கும் பேச்சின் ஊடாக, 13 ஆவது திருத்தத்தின் அடிப்படையில் ஓர் அர்த்தமுள்ள அதிகாரப் பகிர்வுப் பொதியை உருவாக்கி, அதன் மூலம் நாட்டின் அரசியல் தீர்வுக்குத் தேவையானதொரு சூழலை உருவாக்கும் என்பது நம்பிக்கை'' என்று யாழ். நகரில் கடந்த புதன்கிழமை உரையாற்றிய இந்திய வெளியுறவுத்துறை அமைச்சர் கிருஷ்ணா தெரிவித்தார்.

பேச்சு மூலம் தீர்வு காண்பதற்குத் தேவையான எல்லா உதவிகளையும் இந்தியா செய்யும் என்றும் அவர் கூறினார். அதேவேளை, ''இலங்கை அரசும், வடமாகாண மக்களும் மேற்கொள்ளும் சகல மீள்கட்டமைப்பு முயற்சிகளிலும் இந்திய அரசும் இந்திய மக்களும் தோளோடு தோள்கொடுத்து நிற்பர்'' என்றார் கிருஷ்ணா.

அமைச்சர் தனது உரையில் மேலும் தெரிவித்ததாவது:-

நேற்று அமைச்சர் பீரிஸும் நானும் 260 மில்லியன் அமெரிக்க டொலர்கள் செலவில் 49,000 வீடுகளை அமைப்பதற்கான புரிந்துணர்வு ஒப்பந்தத்தில் கைச்சாத்திட்டோம். இந்தச் செயற்றிட்டத்தின் கீழ் வரும் மிகுதி வீடுகள் இவை.

ஐந்து மாவட்டங்களிலும் 10,000 சைக்கிள்களை விநியோகிப்பதற்கான செயற்றிட்டம் இடம்பெயர்ந்தோரின் வருகையைத் தீவிரப்படுத்தும்.

வடமாகாண மக்களுக்கும் முக்கியமாக யாழ்ப்பாண மக்களுக்கும் தென்னிந்திய மக்களுக்கும் நெருங்கிய தொடர்புண்டு.

காங்கேசன்துறைத் துறைமுகத்தில் கப்பற் சிதைவுகளை அகற்றும் பணிகள் 19 மில்லியன் அமெரிக்க டொலர் செலவில் செய்து முடிக்கப்பட்டுள்ளமையை நான் மகிழ்ச்சியுடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இதன் மூலம் யாழ்ப்பாணத்தில் கடல் வாணிபம் அபிவிருத்தி அடைவதோடு பொருளாதாரச் செயற்பாடுகளும் புத்துயிர் பெறும். அடுத்தகட்ட வேலைகளுக்காகத் தேவையான உதவியை வழங்குவதற்கு நாம் தயாராகவுள்ளோம்.

அச்சுவேலி கைத்தொழிற் பேட்டையைப் புனரமைக்கும் பணிகளையும் நாம் மேற்கொண்டுள்ளோம். இதன் மூலம் வடமாகாணத்தில் தொழில் வாய்ப்புக்கள் ஏற்படுத்தப்படுவதோடு யாழ்ப்பாணத்தில் கைத்தொழில் அபிவிருத்தியும் ஏற்படும். பலாலி விமான நிலையத்தை இலங்கை அரசு சிவில் போக்குவரத்து விமான நிலையமாக அபிவிருத்தி செய்து இலங்கையினுள்ளும் இந்தியாவுடனும் தொடர்புகளை புத்துயிர் பெறச் செய்யும் என்று நம்புகிறோம். இது இரு நாடுகளின் பொருளாதாரத்துக்குப் பெரியதொரு செயலூக்கத்தை அளிக்கும்.

யாழ்ப்பாணத்தின் விளையாட்டுக் கட்டமைப்புகளை மீளபிவிருத்தி செய்வதற்காக துரையப்பா விளையாட்டரங்கைச் செப்பனிடும் பணியை நாம் ஏற்றுள்ளோம். பொது நூலகத்துக்கு அருகில் யாழ்ப்பாணக் கலாசார நிலையம் ஒன்றை நிறுவவும் நாம் உத்தேசித்துள்ளோம். உத்தேச நிலையமானது கலாசாரத்தின் உருவமாகப் பரிணமித்து கலாசார நடவடிக்கைகளுக்குப் புத்துயிர் அளிக்குமென நம்புகின்றேன்.

மூன்று தசாப்தகால ஆயுதப் போராட்டத்தில் இருந்து இலங்கை மீண்டெழுந்துள்ளது. இப்போது சமாதானம் மலர்ந்துள்ளது. ஆயுதப் போராட்டத்தில் இருந்து இலங்கையை மீட்ட அதே மதிநுட்பமுள்ள தலைமை, இலங்கையிலுள்ள சகல சமூகத்தினரிடையேயும் தேசிய நல்லிணக்கத்தை ஏற்படுத்தும் வகையில் அதிகாரப் பரவலாக்கத்தினூடான ஒரு உண்மையான அரசியல் தீர்வை நாடுவதிலும் ஈடுபடுவர் என்பது எமது உள்ளார்ந்த நம்பிக்கையாகும்.

கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக்குழுவின் ஆக்கபூர்வமான பரிந்துரைகளை நாம் கவனத்தில் கொண்டுள்ளோம். அவற்றின் நடைமுறைப்படுத்தலை நாம் எதிர்பார்க்கின்றோம் - என்றார்.

இதேவேளை, அரசு பேச்சுக்கு வரும் என்று காத்திருந்த கூட்டமைப்பு பேச்சுக் குழுவினர் நேற்றும் ஏமாற்றத்துடன் திரும்பினர். இந்த மாதம் 17, 18, 19 ஆம் திகதிகளில் பேச்சு என்று அறிவித்தபோதும் எந்தவித முன்னறிவித்தலும் இன்றி கடந்த இரு நாள்களும் அரச பிரதிநிதிகள் பேச்சில் கலந்துகொள்ளவில்லை.

''நேற்றுமுன்தினமும் நேற்றும் அரச தரப்பினர் பேச்சுக்கு வரவில்லை. அதற்கான காரணம் எமக்கு அறிவிக்கப்படவும் இல்லை. எனவே இன்று நாம் பேச்சுக்குச் செல்லமாட்டோம்'' என்றார் கூட்டமைப்பு நாடாளுமன்ற உறுப்பினர் சுரேஷ் பிரேமச்சந்திரன்.

இந்த நிலையில் பேச்சு மூலம் தீர்வு காணப்படும் என்று கிருஷ்ணா நம்பிக்கை வெளியிட்டுள்ளமை குறித்துக் கருத்துக் கூறிய சுரேஷ், ஜனாதிபதி மஹிந்தவின் இரட்டை வேடத்தையும் கபடத் தனத்தையும் இந்திய அரசு புரிந்துகொள்ளும் என்று கூட்டமைப்பு நம்புகிறது என்று குறிப்பிட்டார்.

இந்திய வெளிவிவகார அமைச்சருக்கு, ஜனாதிபதி மஹிந்த 13+ தீர்வுக்கு சம்மதித்திருக்கிறார். அதே மஹிந்த தான் இந்திய பத்திரிகைக்கு அண்மையில் மாகாண சபைகளுக்கு காணி, பொலிஸ் அதிகாரங்களை வழங்க முடியாது என்று அடித்துக் கூறி இருந்தார். அதுமட்டுமல்ல இலங்கை ஜனாதிபதி மீண்டும் தனது இரட்டை வேடத்தை காட்டியுள்ளார். இந்திய அரசு அவர்களைப் புரிந்து கொள்ள வேண்டும். 13+ தீர்வுக்கு இந்தியாவுக்கு சம்மதம் தெரிவித்த அன்றே இலங்கை அரச தரப்பு பிரதிநிதிகள் பேச்சில் கலந்துகொள்ளவில்லை. இதன் மூலம் இலங்கை அரசின் கபடத்தனத்தை இந்தியா புரிந்துகொள்ளும் என்று நம்புகிறோம்'' என்றார் சுரேஷ்.

# அரசு - கூட்டமைப்பு பேச்சின் போது இந்திய மத்தியஸ்தம் அவசியம்

## கிருஷ்ணாவிடம் வலியுறுத்தினார் யாழ்.ஆயர்

யாழ்ப்பாணம்,ஜன 20

இலங்கை அரசுக்கும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கும் இடையிலான பேச்சுக்களில் மூன்றாம் தரப்பு மத்தியஸ்தராக இந்தியா செயற்பட வேண்டும் என யாழ் ஆயர் மேதகு தோமஸ் சவுந்தரநாயம் ஆண்டகை இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணாவிடம் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

இந்திய அரசின் உதவிகளைக் கையளிக்கும் நிகழ்வு கடந்த புதன்கிழமை யாழ்.பொது நூலகத்துக்கு முன்னால் இடம்பெற்றது. இந்நிகழ்வில் இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா கலந்துகொண்டார்.

இதன்போதே யாழ் ஆயர் இந்த வேண்டுகோள் அடங்கிய மகஜரொன்றை இந்திய வெளிவிவகார அமைச்சரிடம் கையளித்தார்.

இந்த மகஜரில் மேலும் குறிப்பிடப்பட்டுள்ளதாவது,

இலங்கை அரசானது தமிழ் சிறுபான்மையினருக்குப் பொருத்தமான அரசியல் தீர்வொன்றை அடைவதற்காகத் தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் பேச்சில் ஈடுபட்டுவருகிறது.

இலங்கையில் தமிழர் எதிர்நோக்கும் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண இது ஒரு வழி என இதனை இந்திய வெளிவிவகார அமைச்சு வரவேற்றிருக்கிறது. ஆனால், இலங்கை அரசானது பேச்சுக்களின் வழி மாகாண சபைகள் இயங்குவதற்கு தேவையான அதிகாரங்களை வழங்குவதில் எள்ளளவும் விட்டுக் கொடுக்கவில்லை.

30 ஆண்டுகள் உள்நாட்டு யுத்தத்தின் பின்னரும் பெரும்பான்மையைக் கொண்ட இலங்கை அரசு மத்தியில் இருந்து தமது அதிகாரங்களை வழங்கத் தயாராக இல்லை.

எனவே இலங்கை அரசிற்கும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கும் இடையிலான பேச்சின் வழி இரு தரப்பினரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய தீர்வொன்றிற்கு வழி செய்யும்படி இந்திய அரசை விநயமாக வேண்டுகிறோம்.

இல்லாவிடின் இப்பேச்சுக்கள் நீண்டு கொண்டு போவதோடு இலங்கை அரசானது புதிய வழிகளை தேடி அரசியல் பிரச்சினைக்குத் தீர்வினைக் காணும் எண்ணத்தைப் பின் தள்ளிக்கொண்டே போகும்.

எனவே இந்திய அரசானது புவியியல் நோக்கங்களையும் தாண்டி உண்மையாகத் தமிழ் மக்களின் பிரச்சினைக்குத் தீர்வு காண உழைக்க வேண்டும். இந்தப் பேச்சில் இந்திய அரசு மத்தியஸ்தம் வகிப்பதை இலங்கை அரசு எதிர்க்கப் போவதில்லை.

இந்திய சமாதான உடன்படிக்கைக்கு முன்பு இந்திய அரசு இது போன்ற மத்தியஸ்தப் பணியை ஆற்றிய போதும் தமிழ் தலைவர்கள் இந்திய சமாதான ஒப்பந்தத்தின் தன்மைகளை உணராமலும் தமக்குள் கெட்டித்தனமாக ஒன்றிணைந்து செயல்படாமலும் தூக்கி எறிந்துவிட்டனர்.

எனவே, இந்திய வெளிவிவகார அமைச்சானது இந்தச் சந்தர்ப்பத்தைத் தவறவிடாமல் எமது வேண்டுகோளைப் பரிசீலித்து எமது உதவிக்கு வரும்படி அன்பு வேண்டுகோள் விடுக்கிறோம்.

போரினால் தாக்கப்பட்டு மீள்குடியேற்றம் செய்யப்படுகின்ற மக்கள் மேல் தாங்கள் காட்டும் மனிதாபிமான கரிசனைக்கு நன்றி தெரிவிக்கிறோம் என குறிப்பிடப்பட்டுள்ளது.

# 8 ஆசிய நாடுகளுடன் இலங்கையில் போர் பயிற்சி

கொழும்பு, ஜன.20

சீனா, இந்தியா உள்ளிட்ட எட்டு ஆசிய நாடுகள் பங்கேற்கும் இராணுவப் பயிற்சி நடவடிக்கை ஒன்றை இலங்கை இராணுவம் நடத்தவுள்ளது.

இராணுவத் தளபதி லெப்.ஜெனரல் ஜெகத் ஜெயசூரிய இந்தத் தகவலை வெளியிட்டுள்ளார்.

தியகவ என்று பெயரிடப்பட்டுள்ள இந்தப் போர்ப்பயிற்சி நடவடிக்கையில் சீனா, இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேஸ் உள்ளிட்ட எட்டு ஆசிய நாடுகள் பங்கேற்கவுள்ளன.

ஒவ்வொரு நாட்டின் சார்பிலும் தலா 8 படையினர் வீதம் மொத்தம் 64 வெளிநாடுப் படையினருடன் இலங்கைப் படையினரும் இணைந்து இந்தப் போர்ப் பயிற்சியில் பங்கேற்கவுள்ளனர்.

போர் அனுபவப் பகிர்வு மற்றும் இராணுவ நடவடிக்கைகளின் போது பயன்படுத்தப்படும் தந்திரோபாயங்களை உள்ளடக்கியதாக இந்தப் பயிற்சி நடவடிக்கை அமையும் என்று இராணுவத் தளபதி தகவல் வெளியிட்டுள்ளார்.

# இவ்வார நிகழ்வு (20.01.2012 - 26.01.2012)

### கனடியத் தமிழ்க் காங்கிரஸின் வருடாந்த பொங்கல் கொண்டாட்டம்

கனடியத் தமிழ்க் காங்கிரஸின் வருடாந்த பொங்கல் கொண்டாட்ட நிகழ்வுகள் 21.01.20.2012 மாலை 5:30 மணிக்கு 2155 McNicoll Ave. Scarborough Torontoவில் உள்ள Grand Baccus Banquet Hall Conference Centre இல் நடைபெறவுள்ளது.

### 'வாழையடி வாழை' வருடாந்த கலைவிழா நிகழ்வுகள்

நீர்வேலி நலன்புரிச் சங்க கனடாக் கிளையின் ஏற்பாட்டில் 'வாழையடி வாழை' வருடாந்த கலைவிழாவும் நிகழ்வுகளும் இராப் போசன விருந்தும் 21.01.2012 மாலை 5 மணிக்கு 231 Milner Ave. Scarborough Torontoவில் உள்ள St.Peter Paul Banquet Hall இல் நடைபெறவுள்ளது.

### சர்க்கரைப் பொங்கல் விழா

கனடா இந்து மாமன்றத்தினால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள சர்க்கரைப் பொங்கல் விழா 21.01.2012 மாலை 5 மணிக்கு 1785 Finch Ave. West Torontoவில் உள்ள York wood Library auditorium இல் நடைபெறவுள்ளது.

### தமிழர் புத்தாண்டும் கலைவிழாவும் பொங்கல் விழாவும்

வங்கக் கடலில் மாவீரர்களானோரது நினைவாக தமிழர் கலைபண்பாட்டுக் கழகத்தினால் ஏற்பாடு செய்யப்பட்டுள்ள 2012ம் ஆண்டு தமிழர் புத்தாண்டும் கலைவிழாவும் பொங்கல் விழாவும் நடைபெறவுள்ளது.

இதன் போது கனடா தமிழர் கலை பண்பாட்டுக்கழகம் மற்றும் இளையோர் அமைப்புக்களினால் மலர் வணக்கம், எழுச்சிக் கலைநிகழ்வுகளும் 21.01.2012 மாலை 5 மணிக்கு 800, Marcel LaurinMontrealville St.Montreal இல் நடைபெறவுள்ளது.

### கனடிய தமிழர் விளையாட்டுத்துறையின் பரிசளிப்பு விழா நிகழ்வு

கனடிய தமிழர் விளையாட்டுத் துறையின் (இ.கூ.கு.அ.) 2012ம் ஆண்டுக்கான பரிசளிப்பு விழா நிகழ்வுகள் 21.01.2012 2450 Birchmount Rd. (Leacock Building)Torontoவில் உள்ள Stephen Leacock Collegiate Auditorium இல் நடைபெறவுள்ளது.

தொடர்புகொள்ள வேண்டிய தொலைபேசி இலக்கங்கள் 647 406 0307, 647 274 9366, 647 408 4906

### வருடாந்த தேவார, தமிழ் பேச்சுப் போட்டிகள்

வட்டுக்கோட்டை இந்து வாலிபர் சங்கத்தினால் நடாத்தப்பட்டுவரும் வருடாந்த தேவார, தமிழ் பேச்சுப் போட்டிகள் 21.01.2012 பிற்பகல் 2 மணிக்கு 150 Borough Drive, Scarbo rouh Torontoவில் உள்ள Scarborough Civic Centre இல் நடைபெறவுள்ளது.

தொடர்புகொள்ள வேண்டிய தொலைபேசி இலக்கங்கள் ஈசன் 416 996 6915 ,சக்தி 416 970 5535 ,ராஜா 905 216 1325

### கலந்துரையாடல்

பூநகரி பிரதேச சபைக்குட்பட்ட நூல் நிலையங்களுக்கான புத்தகங்கள் வாங்கி விநியோகம் செய்வதற்கான கலந்துரையாடல் 22.01.2012 மாலை 5:30மணிக்கு நடைபெறவுள்ளது.

தொடர்புகொள்ள வேண்டிய தொலைபேசி இலக்கங்கள் 647 404 1671, 647 808 2242 Web: www.poonakari.com

### Quarterly Meeting

CANADIAN TAMILS' CHAMBER OF COMMERCE Quarterly Meeting 25.01.2012 CµÄ 7:00 ©oUS 5284 Highway 7 East, Markham CÀ EÒÍ

Merlyn's Taste of World Restaurant இல் நடைபெறவுள்ளது.

நன்றி:- Inayam.net உங்களது நிகழ்வுகளும் இடம்பெற விரும்பினால் உறுதிப்படுத்த கூடிய தொலைபேசி இலக்கங்களுடன் எழுதி அனுப்பவும்.
அனுப்பவேண்டிய முகவரி:- canada@uthayan.com,
fax:-1 647 931 7373



தமிழ் மக்கள் மனம் நிறைந்த தாயக ஏடு

## பதின்மூன்றை நோக்கி நகராமல் 13⁺ பிறப்பது எவ்வாறு....?

*இனப்பிரச்சினைக்கு அரசியல் தீர்வு காண்பதில் 13ஆவது அரசமைப்புத் திருத்தத்துக்கு அப்பால் செல்லவும் ஜனாதிபதி ராஜபக்ஷ தயாராக இருப்பதாக இந்திய வெளிவிவகார அமைச்சர் கிருஷ்ணா தெரிவித்திருப்பது அரசியல் வட்டாரங்களில் பல்வேறு சர்ச்சைகளை உருவாக்கி உள்ளது. ஜனாதிபதி ராஜபக்ஷ இன்னும் 13 பற்றியோ 13 ⁺ பற்றியோ பகிரங்கமாக அறிவிக்கவில்லை. அவர் கூறியதாக இந்திய வெளிவிவகார அமைச்சர் கொழும்பில் தெரிவித்திருந்தார்.*

*மாகாண சபைகளுக்கு காணி, பொலிஸ் அதிகாரங்களை ஒருபோதும் வழங்க முடியாது; இந்த விடயத்தில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பினர் புலிகள் போன்று நடந்து வருகிறார்கள். இனியும் பொறுமை காக்கமுடியாது என்று மிகவும் காட்டமாகக் கருத்துக்களை வெளியிட்டு வந்த ஜனாதிபதி, திடீரென அரசமைப்புக்கான 13 ஆவது திருத்தத்துக்கு அப்பால் சென்றும் அதிகாரப் பரவலாக்கலை நடைமுறைப்படுத்தத் தயாராக இருப்பதாக இந்திய வெளிவிவகார அமைச்சரிடம் தெரிவித்ததன் பின்னணியில் நிறையவே மர்மம் இருக்கலாம் என்று அரசியல் வட்டாரங்களில் கருத்து நிலவுகிறது.*

*ஜனாதிபதியின் உறுதி மொழி உண்மையிலேயே நடைமுறைப்படுத்தப்படுமானால், சுமந்திரன் எம்.பி. கூறியது போன்று , அரசமைப்புக்கான 13 ஆவது திருத்தத்தின் கீழான அதிகாரங்கள் குறித்துப் பேச வேண்டிய அவசியமே இனி ஏற்படாது. 13⁺ பற்றியே அரச தரப்பும் கூட்டமைப்பும் பேச்சு நடத்தவேண்டும்.*

*ஆனால், மாகாணசபைகளுக்கு காணி, பொலிஸ் அதிகாரங்கள் கிடைக்கவே கிடையாது. ஜனாதிபதி முன்னர் அளித்த உறுதி மொழியையே மீண்டும் வழங்கி இருக்கிறார் என்ற கருத்துக்களே கொழும்பு அரசியல் வட்டாரங்களில் மேலோங்கி நிற்கின்றன. எதிர்வரும் மார்ச் மாதம் ஜெனிவாவில் நடைபெறவுள்ள ஐ.நா. மனித உரிமைகள் பேரவைக் கூட்டத்துக்குப் பின்னர், குறிப்பிட்ட வாக்குறுதி காற்றில் பறக்க விடப்பட்டுவிடும் என்றே விடயமறிந்த வட்டாரங்கள் அடித்துச்சொல்கின்றன.*

*ஜெனிவா மாநாட்டில் இந்தியாவின் ஆதரவைப் பெறு வதற்கே ஜனாதிபதி இப்படியான வாக்குறுதியை அளித்துள்ளார் என்கிறது ஐ.தே.க. இதனை அரசு நிறைவேற்றாது என்றும் அது கூறுகிறது.*

*அரசமைப்புக்கான 13 ஆவது திருத்தம் நாட்டில் தற்போது நடைமுறையில் இல்லாதது; அதற்கும் அப்பால் என்று கூறுவது அரசினால் திருத்தம் செய்யப்பட உள்ள புதிய சட்டத்தையே குறிப்பிடுகிறது என்கிறது விமல் வீரவன்ஸவின் தேசிய சுதந்திர முன்னணி. புதிய சட்டத்தில் காணி, பொலிஸ் அதிகா ரங்கள் உள்ளடக்கப்படும் என்று ஜனாதிபதி எச்சந்தர்ப் பத்திலும் தெரிவிக்கவில்லை என்றும் அது கூறுகிறது. போர் உக்கிரமாக நடந்துகொண்டிருந்த போது 13⁺ எனக் கூறி ஏமாற்றிய அரசு, மீண்டும் அதே பாணியைப் பாடுகின்றது என்கிறார் கூட்டமைப்பின் சிரேஷ்ட தலைவர்களில் ஒருவரான சுரேஷ் பிரேமச்சந்திரன்.*

*ஆகவே, பேச்சுவார்த்தையைத் தொடர்வதற்கு அரச தரப்புக்கும் கூட்டமைப்புக்கும் இடையில் தற்பொழுது இருந்துவரும் நெருக்கடியை, முரண்பாட்டை ஜனாதிபதியின் 13⁺ அறிவிப்பு நீக்கிவிடும் என்று கருதிவிட முடியாது.*

*ஜனாதிபதியின் கூற்றுக்கு அரச தரப்பு முக்கியத்துவம் அளித்திருந்தால், கடந்த மூன்று தினங்கள் தொடர்ந்து நடத்த இருந்த பேச்சுவார்த்தையை அரசு புறக்கணித்திருக்கமாட்டாது. இந்திய வெளிவிவகார அமைச்சருக்கு ஜனாதிபதி தெரி வித்த கருத்துக் குறித்தும், பேச்சுக்களில் கலந்துகொள்ளும் அரச தரப்பிடம், கூட்டமைப்பு விளக்கம் பெற்றிருக்க முடியும்.*

*அரசைப் பொறுத்தவரை, நாடாளுமன்றத் தெரிவுக்குழுவில் கூட்டமைப்பை இடம்பெற வைப்பதே முக்கியம். ஆனால், தெரிவுக்குழு தனக்கு வைக்கப்படும் ஒரு பொறி என்று கூட்டமைப்புக் கருதுகிறது. தெரிவுக்குழுவில் இருந்து வெளியேறும் நிலைமை ஏற்படுமானால், பேச்சுவார்த்தையை முறித்த முழுப் பழியும் கூட்டமைப்பையே சாரும். அடிப்படை விடயங்களில் முதலில் இணக்கம் காணப்படவேண்டும் என்பதில் கூட்டமைப்பு பிடிவாதமாக இருக்க வேண்டும். நிலை தடுமாறும் அல்லது தளம்பிப் போகும் அளவுக்குக் கீழிறங்கக் கூடாது.*

*இன்றைய நிலையில் அரசமைப்புக்கான 13ஆவது திருத்தத்தை முழுதாக அமுல்படுத்துவதே அரசுக்குப் பெரும் பிரச்சினை ஆகும். அதனை நோக்கி நகராமல், 13⁺ என்பதை நினைத்துக்கூட பார்க்க முடியாது. ஆனால், ஜனாதிபதி 13⁺க்குப் போகவும் தயார் என்கிறார். இது குறித்து ஜனாதிபதி உத்தியோகபூர்வமாக நாட்டு மக்களுக்கு அறிவித்து கூட்டமைப்புடனான பேச்சிலும் அதனை முன்வைப்பதன் மூலமே சர்ச்சைகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கமுடியும்.*

*இதேவேளை, பதின்மூன்றாவது திருத்தத்தில் உள்ள அதிகாரங்களையே முழுங்கி விடும் நோக்குடன், நாளொரு நிலைப்பாடும், பொழுதொரு செயற்பாடுமாக 'சூ' காட்டும் அரச தரப்பினர், அமைச்சர் கிருஷ்ணாவிடம் தெரிவித்த 13⁺ ஐ கற்பனையும் செய்யமாட்டார்கள் என்பதனை அறுதியாகக் கூறலாம்.*

*ஆகையால், ஜனாதிபதி மஹிந்த அமைச்சர் கிருஷ்ணாவுக்குத் தெரிவித்த "வாக்குறுதி" மெய்ப்பட வேண்டும் எனில், இந்தியா மீண்டும், 1987 ஆம் ஆண்டில் செயற்பட்டது போன்று, பேச்சுவார்த்தைக்கு மத்தியட்சம் வகிக்கவேண்டும்.*

*இன்னொரு வளமாகப் பார்த்தால், தான் தொடக்கி வைத்த இலங்கைத் தமிழர்களின் அரசியல் பிரச்சினைக்கான தீர்வு முயற்சியை, இந்தியா தொடர்ந்தும் இயற்றலாம். அவ்வாறு செயலாற்றினால் அது தலையீடு என்றாகாது. இங்கு வந்து சென்ற அமைச்சர் கிருஷ்ணா, அதற்கு உந்து சக்தியாக இருப்பாரா? அப்போது தொட்டுவிட்டுப்போன பணியை இப்போது தொடர்வதால் இந்தியாவுக்கு என்ன நட்டம்? இலங்கைத் தமிழர்களின் பிரச்சினையைத் தீர்த்து வைப்பதில் இந்தியாவுக்கு ஆத்மார்த்தமான அக்கறை இருப்பின், சமரசம் காண்பதில் கஷ்டம் இருக்காது.*

### காணி, பொலிஸ் அதிகாரங்கள்

# அரசின் கொள்கையில் மாற்றம் சாத்தியமே

கொழும்பு, ஜன.20

அரசினுடைய அல்லது வேறு அரசியல் நிலைப்பாடுகள் மாற்ற மடையா என்று யாரால் கூற முடியும்? அரசின் அல்லது அரசியல் நிலைப்பாடுகளின் அதிகாரப் பகிர்வு அல்லது காணி அதிகாரப் பகிர்வு தொடர்பான நிலைப்பாடுகள் மாற்றமடையாது என்று எவரால் எதிர்வு கூற முடியும்? எல்லாமே அநித்தியமானவை என்ற பௌத்த தத்து வத்தின்படி நான் எல்லாம் மாறக்கூடியவை என்பதில் நம்பிக்கை கொண்டிருக்கின்றேன்.

இவ்வாறு கூறியிருக்கின்றார் முன்னாள் பாதுகாப்பு செயலாளரான ஒஸ்டின் பெர்ணாண்டோ. லோங்றீட் என்ற இணைய வெளியீட்டில் அவர் எழுதியுள்ள கட்டுரையில் மேலும் தெரிவித்திருப்பதாவது:

கற்றுக்கொண்ட பாடங்கள் மற்றும் நல்லிணக்க ஆணைக் குழுவின் அறிக்கையில் அதிகாரப் பகிர்வானது இந்த நாட்டு மக்கள் மத்தியில் பெரும் ஐக்கியத்தையும் அமைதியையும் தோற்றுவிப்பதாக இருக்கும் என்று தெரிவித்திருப்பதைக் கருத்தில் கொள்ளும்போது அரசின் நிலைப்பாட்டில் மாற்றம் ஏற்படுவதற்கு வாய்ப்பு உண்டு.

அரசமைப்பில் இணைக்கப் பட்டுள்ள 13 ஆவது திருத்த விதிகளின்படி, காணி நிர்வாக அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்வதானது அதிகாரப்பகிர்வுச் செயற்பாட்டின் ஒரு பகுதியாகும். எனவே காணி அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்ளும் பேச்சுக்களைத் தொடர்வது பயனுள்ளதாகவிருக்கும்.

இப்போது சிறிலங்கா சுதந் திரக்கட்சியின் பொதுச் செயலராக இருக்கும் அமைச்சர் மைத்திரி பாலசிறிசேன ஒருசமயம் கூறியிருந்தார் ''அரசமைப்பின் 13 ஆவது திருத்தத்தின் கீழ் கிழக்கு மாகாணத்துக்கு காணி, பொலிஸ் அதிகாரங்களை வழங்க அரசு தயாராக இருக்கிறது'' என்றார். அவரிடம் போய் காணிப்பகிர்வு மற்றும் பொலிஸ் அதிகாரப் பகிர்வு குறித்த அவருடைய இன்றைய நிலைப்பாடு என்னவென்று கேட்டால் அவர் மாற்றுக் கருத்தையே வெளிப்படுத்துவார். இதற்கு அரசியல் சிந்தனையில் ஏற்படும் மாற்றங்களே காரணம்.

கடந்த டிசெம்பர் 21 ஆம் திகதி டெய்லி நியூஸ் பத்திரிகையில் வெளியான செய்தியின்படி ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷ தமிழ் கூட்டமைப்பின் பொலிஸ் மற்றும் காணி அதிகாரங்களை வடக்கு கிழக்குக்குக் கோருவதானது நடைமுறைச் சாத்தியமற்றது என்று குறிப்பிட்டிருந்தார். இது காணி அதிகாரப் பகிர்வில் ஏற்பட் டுள்ள சிந்தனை மாற்றத்தைக் காட்டுகின்றது. இதே அதிகாரங்களை வழங்குவதாக முன்னர் தமது இது தொடர்பான தீர்வுப் பொதியில் இதனை அவர் உள்ளடக்கியிருந் தார்.

எனவே காணி அதிகாரப் பகிர்வு சாத்தியமானது என்றே அவர் கருதுகிறார் என்று கொள்ள வேண்டும்.

# போலிக் கடிதம் மூலம் பட்டதாரிகள் நியமனம்

### குடாநாட்டில் நடந்த மோசடி அம்பலம்

யாழ்ப்பாணம்,ஜன.20

கல்வி அமைச்சில் இருந்து வழங்கப்பட்டது போன்ற போலியான நியமனக் கடிதங்களை வழங்கி பட்டதாரி நிய மனம் பெற முனைந்த மோசடி ஒன்று அம்பலமாகி உள்ளது.

இவ்வாறான போலி நியமனக் கடிதங்களுடன் அண்மைய நாள்களில் 9 பேர் பாடசாலைகளில் இணைந்துள்ள னர் என்று தெரிவிக்கப்படுகிறது. உறுதி யான எண்ணிக்கை தெரியவரவில்லை.

இத்தகைய கடிதத்துடன் பெண் ஒருவர் பாடசாலையில் இணைந்திருந்தார் என்பதை 'உதயன்' உறுதிப்படுத்தி உள்ளது.

இந்த மோசடி பற்றித் தன்னிடமும் முறைப்பாடு செய்யப்பட்டுள்ளதாக வடமாகாணக் கல்விப் பணிப்பாளர் ப.விக்னேஸ்வரன் தெரிவித்தார்.

உயர் கல்வி அமைச்சினது போன்றே தயாரிக்கப்பட்ட போலியான கடிதத் தலைப்பில், தனித் தமிழில் இந்த நிய மனக் கடிதங்கள் வழங்கப்பட்டுள்ளன. 6.12.2011 திகதியிட்ட இந்தக் கடிதத்தில் கல்வி அமைச்சின் செயலாளர் எச்.எம்.குணசேகர என்பவரின் கையெழுத்து இடப்பட்டுள்ளது.

இந்தக் கடிதத்தைச் சமர்ப்பித்து கடந்த வியாழக்கிழமை யாழ். வண்ணை நாவலர் பாடசாலையில் பெண் ஒருவர் இணைந்துள்ளார். அவரது நியமனக் கடிதத்தில் சந்தேகம் கொண்ட அதிபர் அது பற்றி விசாரித்துள்ளார். அதன் பின்னர் அந்தப் பெண் பாடசாலைக்கு வருவதை நிறுத்திவிட்டார்.

அவரிடம் கல்வித் திணைக்களத் தினர் விசாரித்ததில் தனக்குத் தெரிந்த வரையில் 9 பேருக்கு இந்த வகையிலான நியமனம் வழங்கப்பட்டதாக அவர் கூறியுள்ளார்.

அவர் சமர்ப்பித்த நியமனக் கடிதத் தில் பல தவறுகள் இருப்பதை மாகாணக் கல்வித் திணைக்களம் கண்டறிந்துள்ளது.

பாடசாலை ஆசிரியர்களுக்கான நியமனங்கள் மாகாணக் கல்வித் திணைக்களத்தாலேயே மேற்கொள்ளப்படுகின்றன. ஒருபோதும் உயர் கல்வி அமைச்சால் மேற்கொள்ளப்படுவ தில்லை. போலி நியமனக் கடிதங்கள் உயர் கல்வி அமைச்சால் வழங்கப்பட்டுள்ளன.

கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள செயலாளரின் பெயர் கல்வி அமைச் சின் செயலாளருக்கு உரியதே தவிர, உயர் கல்வி அமைச்சின் செயலாள ருக்கு உரியதல்ல.

போலி நியமனக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள சம்பள அளவுத் திட்டம் புதிதாக இணையும் ஆசிரியர்களுக்கு உரியதல்ல. கடிதத் தலைப்பில் உயர் கல்வி அமைச்சு என்பதற்கான ஆங்கிலப் பதம் வழக்கமாக அந்த அமைச்சுப் பயன்படுத்துவதை ஒத்திருக்கவில்லை.

வழக்கமான அரச நியமனக் கடிதங்களுக்கு முற்றிலுமான மாறான வடிவத்தில் தனித் தமிழில் போலிக் கடிதம் தயாரிக்கப்பட்டுள்ளது.

அந்தக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு பிரதிகள் வலயக் கல்விப் பணிப்பாளருக்கோ மாகாணக் கல்விப் பணிப்பாளருக்கோ கிடைக்கவில்லை.

அது தவிர அண்மைக் காலத்தில் ஆசிரிய நியமனங்கள் எதுவும் அரசாலோ அமைச்சாலோ மேற்கொள்ளப்படவில்லை என்று இலங்கைத் தமிழர் ஆசிரியர் சங்கம் தெரிவித்தது.

இந்தப் போலி நியமனக் கடிதப் பிரதி உயர் கல்வி அமைச்சுக்கு மாகாணக் கல்வித் திணைக்களத்தால் அனுப்பி வைக்கப்பட்டுள்ளது.

போலியான கடிதங்களைத் தயா ரித்து சிலர் நியமனம் பெற முயற்சித் தார்களா அல்லது பணத்தைப் பெற்றுக்கொண்டு யாராவது மோசடியில் ஈடுபட்டார்களா என்ற கோணங்களில் அதிகாரிகள் விசாரணையில் ஈடுபட்டுள்ளனர்.

# தமிழருக்கு எதிரான ஆளும் காங்கிரஸ் அரசு

## சாடுகிறார் நெடுமாறன்

சென்னை, ஜன.20

இந்தியாவில் மத்தியில் ஆளும் காங்கிரஸ் அரசு தமிழர்களுக்கு எதிரானது என்று உலகத் தமிழர் பேர வைத் தலைவர் பழ. நெடுமாறன் தெரிவித்தார்.

தஞ்சாவூரில் நடைபெற்ற தமிழர் கலை இலக்கிய விழாவின் நிறைவு நாளில் பேசியபோதே அவர் மேற்கண்டவாறு தெரிவித்தார்.

அங்கு அவர் மேலும் தெரிவித்த தாவது:

இலங்கையில் ஒரு கோடி சிங்கள வர்கள் வாழ்கின்றனர். ஈழப் போருக்கு முன்னதாக அங்கு 45 லட்சம் தமிழர்கள் இருந்தனர். அவர்களில் 3 லட்சம் பேர் கொல்லப்பட்டு விட்டனர். 5 லட்சம் தமிழர்கள் வெளிநாடுகளுக்கு குடி பெயர்ந்துள்ளனர். இன்னும் 5 லட்சம் தமிழர்கள் இலங்கையிலேயே அகதிகளாக, சிங்களவர்களின் கொடுமைகளை அனுபவித்து வருகின்றனர்.

தற்போது ஈழத்தில் வாழும் தமிழர்களின் எண்ணிக்கை குறைவடைந்து விட்டது. தமிழர்கள் வாழ்ந்த பகுதிகளில் சிங்களவர்கள் குடிபெயர்ந்து, அங்கிருந்த தமிழ் அடையாளங்களை அழித்து வருகின் றனர்.

ஈழத்திலிருந்து 20 மைல் தொலைவில் உள்ள தமிழகத்தில் 7 கோடி தமிழர்கள் உள்ளனர். இருந்தும், ஈழப் போருக்கு எதிராகத் தமிழகத்தில் எழுந்த எதிர்ப்புகள், போராட்டங்கள் குறித்து இலங்கை ஜனாதிபதி ராஜபக்ஷ பயம் கொள்ளவில்லை.



ஏழு கோடித் தமிழர்களின் கொந்தளிப்புகள் ராஜ பக்ஷவுக்கு பயத்தை ஏற்படுத்தாதற்குக் காரணம் இந்திய அரசும், அதற்கு வால்பிடித்து வந்த முந்தைய தி.மு.க. அரசும் தான். தமிழர்களின் குரல்களை இந்திய அரசு ம ம், அன்றைய தி.மு.க. அரசுதான் காரணம்.

தமிழர்கள் வரலாற்றில் மாறாத அவமானக் கறையாக இந்த நிகழ்வுகள் அமைந்து விட்டன. இந்தக் கறையைத் துடைத்தெறிய, தமிழர்களுக்கு எதிரான அரசுகளையும், கட்சிகளையும் அடையாளம் கண்டு ஒதுக்க வேண்டும் என்று நாம் சபதமேற்க வேண்டும். - என்றார் அவர்.

# குழந்தைகள் 7 பேர் சாவு மே.வங்கத்தில் பதற்றம்

டில்லி,ஜன.20

மேற்கு வங்க மாநிலத்தில் கடந்த இரண்டு திகதிகளுக்குள் ஏழு குழந்தைகள் உயிரிழந்துள்ளமை அங்கு பெரும் பதற்றம் நிலவியது.




மேற்கு வங்க மாநிலத்தில் உள்ள மால்டா மாவட்டத்தில் உள்ள அரசு வைத்தியசாலையில் பல்வேறு சிகிச்சைகளுக்காக அனுமதிக்கப்பட்டிருந்த பிறந்த மூன்று மணி நேர குழந்தை முதல் மூன்று வயது குழந்தைகள் வரை சிகிச்சை பலனின்றி உயிரிழந்துள்ள விடயம் அந்த மாநிலத்தில் பதற்றத்தை ஏற்படுத்தியுள்ளது.

இதுகுறித்து மேற்கு வங்க மாநில சுகாதாரத்துறை அமைச்சர் சந்திரிமா பட்டாச்சார்யா தெரிவித்ததாவது:

உயிரிழந்துள்ள ஏழு குழந்தைகளில் ஒரு குழந்தை மட்டுமே அரசு வைத்தியசாலையில் பிறந்தது என்றும் மற்ற குழந்தைகள் நோய்கள் குறித்து பரிசோதனைக்காக வந்தவை என்று தெரிவித் துள்ளார்.

மேலும் பீகார், உத்தரகண்ட் போன்ற மாநிலங்களில் பிறக்கும் உடல் எடை குறைவான குழந்கைள் இங்கு அழைத்து வரப்பட்டுள்ளதாகவும் அவர் தெரிவித்துள்ளார்.

இந்த பிரச்சினைக்கு முன்பு, கடந்த இரண்டு மாதங் களுக்கு முன்னர் மால்டா வைத்தியசாலை யில் எட்டுக் குழந்தைகள் உயிரிழந்தனர்.

# இந்திய இராணுவத்தின் கொடூரம் பங்களாதேஷ் இளைஞர் மரணம்



புதுடில்லி, ஜன.20

பங்காதேஷ் வாசி ஒருவரை இந்திய எல்லைப் பாதுகாப்புப் படையினர் உடைகளைக் களைந்து மோசமாகத் தாக்கியதில் அவர் மரணமான சம்பவம் இந்தியாவில் பெரும் சர்ச்சையை ஏற்படுத்தி உள்ளது.

இந்தியாவின் மேற்கு வங்க மாநிலத்தின் மூர்சிதா பாத் என்ற மாவட்டத்தின் இந்த வார முற்பகுதியில் இந்தக் கொடூரம் நிகழ்ந்திருக்கிறது. சம்பவம் நடந்த இடம் இந்திய பங்களாதேஷ் எல்லைப் பகுதியாகும்.

பங்களாதேஷ் வாசியை ஆடைகள் அனைத்தையும் முற்றாகக் களைந்த பின்னர் இந்திய எல்லைப் பாதுகாப்புப் படையினர் அடித்தும் உதைத்தும் மோசமாகத் தாக்கும் வீடியோ இந்தியா உள்ளூர் தொலைக்காட்சி சிலவற்றில் ஒளிபரப்பாகி உள்ளது. இந்தக் கொடூரச் சம்பவத்தில் இந்திய பாதுகாப்புப் படையைச் சேர்ந்த 8 பேர் ஈடுபட்டுள்ளமை அந்த வீடியோவில் பதிவாகி உள்ளது.

26 வயதுடைய சலீம் ஷேக் என்ற இந்த பங்களாதேஷ் வாசி தன்னைத் தாக்க வேண்டாம் என்றும் கோருவதும் படையினரிடம் கெஞ்சி மன்றாடுவதும் இந்த வீடியோவில் பதிவாகி உள்ளது.

அந்தக் கிராம மக்கள் மற்றும் பல எல்லைப் பாதுகாப்புப் படையினர் முன்னிலையிலேயே இந்த அராஜகம் அரங்கேறி உள்ளதாக இந்திய ஊடகங்கள் தெரிவிக்கின்றன.

இந்தக் கொடூர தாக்குதல் சம்பவத்தை படையினர் ஒருவர் தனது கையடக்கத் தொலைபேசி கமரா மூலம் ஒளிப்பதிவு செய்திருக்கிறார். சுமார் 11 நிமிடம் கொண்ட இந்த வீடியோவில் பங்களாதேஷ் இளைஞன் கொடூர வேதனை தாங்காமல் நிலத்தில் வீழ்ந்து கிடந்து கதறும் காட்சியும் பதிவாகி உள்ளது.நிலத்தில் வீழ்ந்து கிடக்கும் அவரை சீருடை அணிந்த படையினர் கால்களால் உதைத்துத் தாக்குவதும் தெளிவாகத் தெரிகிறது. இந்த மோசமான தாக்குதலால் படுகாயமடைந்த பங்களாதேஷ் இளைஞன் வைத்தியசாலை ஒன்றில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சை பலனின்றி கடந்த புதன்கிழமை அங்கு மரணமாகி உள்ளார். இந்தத் தாக்குதல் சம்பவம் சர்வதேச மட்டத்தில் இந்திய இராணுவத்துக்கு பெரும் அபகீர்த்தி ஏற்படுத்தி உள்ளதாகத் தெரிவிக்கப்படுகின்றது.

இந்தச் சம்பவத்தில் ஈடுபட்ட இராணுவத்துக்கு எதிராக கடும் நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற கோரிக்கை வலுத்துள்ளது. அத்துடன் மரணமானவரின் குடும்பத்துக்கு உரிய நஷ்டஈடு வழங்கப்படவேண்டும் என்றும் கோரிக்கை விடுக்கப்பட்டுள்ளது.

இதற்கிடையே இந்தச் சம்பவத்தில் ஈடுபட்ட 8 படையினரையும் உடனடியாகப் பணி நீக்கம் செய்யுமாறு விசாரணை நீதிமன்றம் உத்தரவிட்டுள்ளது. இந்தச் சம்பவம் பற்றி விசாரிப்பதற்கு இராணுவ அதிகாரி தலைமையிலான குழு ஒன்றையும் இந்திய அரசு நியமித்துள்ளது.

# புதுச்சேரி வந்தார் பிரான்ஸ் அமைச்சர்

புதுச்சேரி,ஜன.20

தானே புயலால் சேதம் அடைந்துள்ள பகுதிகளை பார்வையிடுவதற்காக பிரான்ஸ் நாட்டின் அமைச்சர் ஈடோவரத் கோர்ட்டியல் இரண்டு நாள் பயணமாக இந்திய மாநிலம் புதுச்சேரிக்கு வந்தார்.

புதுச்சேரி மாநில முதல்வர் ரங்கசாமியின் வேண்டு கோளுக்கு இணங்க தானே புயலால் புதுச்சேரியில் ஏற் பட்டுள்ள சேதமதிப்புகளை நேரில் பார்வையிட்டு நிதி யுதவி வழங்குவதற்காக அவர் வருகை தந்துள்ளதாக அரசு தரப்புத் தெரிவித்துள்ளது.

# ஆர்ப்பாட்டம் நடத்த வந்தவர்கள் படையினரால் தடுக்கப்பட்டனர்

## ஓமந்தையோடு திரும்பியது மக்கள் போராட்ட அமைப்பு

யாழ்.நகரில் ஆர்ப்பாட்டம் செய்ய வென கடந்த செவ்வாய்க்கிழமை தென் பகுதியிலிருந்து 13 பஸ்களில் வந்த ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் வடக்கில் ஆறு இராணுவ சோதனை நிலையங்களில் பல மணிநேரம் தடுத்து வைக்கப்பட்டனர். இதனால் யாழ்ப்பாணத்தில் நடைபெறவிருந்த ஆர்ப்பாட்டத்தை இராணுவத்தினர் திட்டமிட்டுத் தடுத்து விட்டதாகக் குற்றஞ்சாட்டப்பட்டுள்ளது.

மதவாச்சி தொடக்கம் புளியங்குளம் வரையான ஆறு இராணுவச் சோதனை நிலையங்களில் பல மணிநேரம் தாம் தடுத்து வைக்கப்பட்டிருந்ததாக மக்கள் போராட்டக் குழுவைச் சேர்ந்த உதுல் பிரேமரட்ண தெரிவித்தார்.

யாழ்ப்பாணத்தில் கடத்தப்பட்டதாகக் கூறப்படும் மக்கள் போராட்டக் குழுவைச் சேர்ந்த லலித், குகன் ஆகியோரை உடனடியாக விடுதலை செய்யக்கோரி நேற்று முற்பகல் 10 மணியளவில் ஆர்ப்பாட்டத்துக்கு ஒழுங்கு செய்யப்பட்டது. மக்கள் போராட்டக்குழுவின் ஏற்பாட்டில் நாம் இலங்கையர் அமைப்பு உள்ளிட்ட 15 இற்கும் மேற்பட்ட அமைப்புகளின் ஒத்துழைப்புடன் இந்த ஆர்ப்பாட்டம் இடம்பெற இருந்தது.

இந்த ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொள்ளவென வந்தவர்களே இராணுவ நிலையங்களில் பல மணிநேரம் தடுத்து வைக்கப்பட்டிருந்தனர்.

பாலம் உடைந்துள்ளது, பாலத்தில் குண்டு வைக்கப்பட்டுள்ளது என இராணுவம் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு காரணங்களைக் கூறி அவர்களின் பயணத்துக்கு முட்டுக்கட்டை போட்டுள்ளது.

மதவாச்சி, இரட்டைப் பெரிய குளம், வவுனியா நகர், ஓமந்தை -புளியங்குளம் உள்ளிட்ட இடங்களில் இவர்கள் தடுக்கப்பட்டதாக ஆர்ப்பாட்டக்காரர்கள் கூறினார்கள்.

யாழ்ப்பாணத்துக்குத் தம்மைச் செல்ல விடாமல் தடுப்பதை நோக்காகக் கொண்டே பல தடைகளைக் கூறி இராணுவம் தடுத்துவிட்டதாக 'உதுல் பிரேமரட்ண' கூறினார்.

இவர்களைப் படையினர் புளியங்குளத்தில் மாலை 4 மணியளவில் தடுத்துநிறுத்தினர். எனவே மேற்கொண்டு பயணித்து யாழ்ப் பாணத்துக்குச் சென்று ஆர்ப்பாட்டத்தில் ஈடுபடுவது முடியாதென்பதால், ஆர்ப்பாட்டக்காரர்களின் திட்டம் மாற்றப்பட்டது. புளியங்குளத்திலேயே 'திடீர்' ஆர்ப்பாட்டமொன்றை அரை மணித்தியாலத்துக்கு அவர்கள் மேற்கொண்டனர்.

இதன்போது ''இராணுவ அடக்குமுறையை நீக்கு'' ''கைது செய்யப்பட்ட - கடத்தப்பட்டவர்களை - உடனடியாக விடுதலை செய்'' என்பன போன்ற வாசகங்களை ஏந்தியவாறு அரசுக்கு எதிரான ஆர்ப்பாட்டத்தில் தாம் ஈடுபட்டதாகவும் உதுல் பிரேமரட்ண மேலும் கூறினார்.

யாழ்ப்பாணத்துக்குச் செல்வதற்கு தம்மை இராணுவம் நேற்று மாலை வரை அனுமதிக்காத நிலை யிலேயே புளியங்குளத்தில் ஆர்ப்பாட்டம் செய்துவிட்டுத் திரும்பிவிட்டதாகவும் அவர் கூறினார்.

''உண்மையில் ஏ-9 வீதி யில் பாலங்கள் எதுவும் உடையவில்லை. இராணுவம் சதித் திட்டம் போட்டே எம்மை யாழ்.நகருக்குச் செல்லவிடாது தடுத் துள்ளது. ஓமந்தையில் 'இது தான் யாழ்ப்பாணம் செல்லும் வழி' என்று படையினர் எமது பஸ்களை காட்டுப் பாதையொன்றால் செல்ல வழி காட்டினர். எனினும் சிறிது நேரத்தில் நிலைமையை அறிந்து நாம் அந்தப் பாதையால் செல்லும் முடிவைக் கைவிட்டோம்.'' என்று உதுல் பிரேமரட்ண கடுமையாக இராணுவத்தைச் சாடினார்.

இதேவேளை -

ஆர்ப்பாட்டம் நிகழ லாம் என்ற எதிர்பார்ப்பில் கடந்த செவ்வாய் முற்பகல் 10 மணி தொடக்கம் பிற்பகல் வரை யாழ் நகர் பஸ் நிலையம் முன்பாக கலகம் அடக்கும் பொலிஸார் பெரும் எண்ணிக்கையில் குவிக்கப்பட்டிருந்தனர்.

# இழுத்து மூடப்பட்ட கூட்டுறவு உணவகம்

யாழ்ப்பாணம், ஜன. 20

யாழ்ப்பாணம் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் உணவகம் எந்தவித முன்னறிவித்தலும் இல்லாமல் திடீரென இழுத்து மூடப்பட்டது.

எனினும் இது குறித்து முறைப்பாடு தெரிவிக்கப்பட்டதையடுத்து உடன் நடவடிக்கை மேற்கொண்ட கூட்டுறவு அபிவிருத்தித் திணைக்கள உதவி ஆணையாளர் வி.கே அருந்தவநாதன் அதனை இன்று மீண்டும் திறப்பதற்கு நடவடிக்கை எடுத்துள்ளார்.

இது தொடர்பாக அவர் தெரிவித்ததாவது-

சங்கத்தின் கட்டடத்தின் கீழ் மாடியில் செயற்பட்டு வந்த சங்கத்தின் உணவகம் திடீரென மூடப்பட்டது. இது தொடர்பாக எனக்கு சில முறைப்பாடுகள் கிடைக்கப்பெற்றன. இதனையடுத்து அதனை மீண்டும் திறப்பதற்கான நடவடிக்கைகள் என்னால் எடுக்கப்பட்டுள்ளன. இந்த உணவகம் இன்று மீண்டும் திறக்கப்படும். கூட்டுறவு உணவகங்களை மூட ஒரு போதும் அனுமதிக்கப்போவதில்லை- என்றார்.

உணவகம் இயங்கிய பகுதியைத் தென்னிலங்கை நிறுவனம் ஒன்றுக்கு வாடகைக்கு வழங்குவதற்காகவே அது மூடப்பட்டதாகத் தெரிய வருகிறது.

# இடம்பெயர்ந்தோருக்கான இழப்பீடு; மாந்தை மேற்கில் தொடரும் மோசடி

மன்னார், ஜன.20

மாந்தை மேற்கு, உதவி அரசாங்க அதிபர் பிரிவுக்குட்பட்ட பகுதியில் கடந்த வருட ஆரம்பத்தில் கட்டுக்கரைக்குளம் உடைப்பெடுத்தது. இந்த அனர்த்தத்தினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு வழங்கப்படவுள்ள இழப்பீட்டில் பெரும் மோசடிகள் இடம்பெற்றுள்ளதாகப் பாதிக்கப்பட்ட மக்கள் தெரிவிக்கின்றனர்.

இது குறித்து மேலும் தெரியவருவதாவது-

கடந்த வருட ஆரம்பத்தில் கட்டுக்கரைக்குளம் உடைப்பெடுக்கலாம் எனும் அபாய எச்சரிக்கையின் காரணமாக அப்பகுதி மக்கள் இடம்பெயர்ந்து மன்னார் பகுதியில் வாழ்ந்து வந்தனர்.

இதன்போது குறித்த பகுதியில் ஏற்பட்ட அனர்த்தத்தின் காரணமாக கட்டுக்கரைக்குளத்தின் வான் பகுதியான அடம்பன் தாழ்வு, பாலையடிப்புதுக்குளம், பரப்புக்கடந்தன் ஆகிய கிராமங்களில் உள்ள வீடுகள் கடுமையாகப் பாதிக்கப்பட்டன.

அப்பகுதியில் ஏற்பட்ட அனர்த்தத்தினால் முழுமையாகப் பாதிக்கப்பட்ட வீடுகளுக்கு இழப்பீட்டுத் தொகையாக ஒரு இலட்சம் ரூபாவும், பகுதியளவில் பாதிக்கப்பட்ட வீடுகளுக்கு 50 ஆயிரம் ரூபாவும் சமூக சேவைத் திணைக்களம் உதவி அரச அதிபர் மூலமாக வழங்க தற்போது நடவடிக்கை எடுத்துவருகின்றது.

ஆனால் இந்தப் பாதிப்புகள் தொடர்பாக இடம்பெற்ற பதிவுகளில் பல குளறுபடிகள் இடம்பெற்றுள்ளதாக பாதிக்கப்பட்ட மக்கள் தெரிவிக்கின்றனர்.

இந்த அனர்த்தத்தினால் பாதிக்கப்பட்ட வேறு கிராமத்தைச் சேர்ந்த - இதனுடன் தொடர்பில்லாத - மக்களது பெயரும் பதிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

அதை விடப் பகுதியாகப் பாதிக்கப்பட்டவர்களுக்குப் 15ஆயிரம் ரூபாய் தருவதாகவும் இதனை மீறி 50 ஆயிரம் ரூபாய் பணத்தைக் கேட்டால், இந்திய வீட்டுத் திட்டம் தர மாட்டோம் என்றும் இதற்கு பொறுப்பான அதிகாரிகள் கூறியதாகவும் மக்கள் தெரிவிக்கின்றனர்.

மேலும் வெற்று உறுதிப் பத்திரங்கள் இரண்டில் பாதிக்கப்பட்ட மக்களிடம் கையொப்பம் பெறப்பட்டுள்ளது. பாதிக்கப்பட்ட மக்கள் சிலர் தாம் கையொப்பமிட மறுத்து விட்டதாகவும் ஆதங்கத்துடன் தெரிவித்தனர்.

எனவே உண்மையாகப் பாதிக்கப்பட்டவர்களுக்கு உரிய நிவாரணம் கிடைக்கச் சம்பந்தப்பட்டவர்கள் நீதியான முறையில் செயலாற்ற வேண்டும் என மக்கள் கோரிக்கை விடுக்கின்ற னர்.

நீதியாகவும் நேர்மையாகவும் நடந்து கொண்டு மக்களுக்கு சேவையாற்றக் கூடிய அதிகாரிகள் முறைகேடான முறையில் செயலாற்றுவதை பாதிக்கப்பட்ட மக்கள் கண்டித்துள்ளனர். இந்த விடயம் தொடர்பில் உயரதிகாரிகளைச் சந்திக்கவுள்ளதாகவும் அவர்கள் தெரிவித்துள்ளனர்.

இந்த விடயம் தொடர்பில் மாந்தை மேற்கு பிரதேச சபை உறுப்பினர் ஒருவரிடம் தொடர்பு கொண்டு கேட்டபோது மக்களுக்கு வழங்கப்படவுள்ள இழப்பீடுகளில் பெரும் மோசடிகள் இடம்பெற்று வருகின்றமை உண்மை எனத் தெரிவித்தார்.




## 1000 மில்லியனில் குளம் புனரமைப்பு

அக்கராயன், ஜன.20

கிளிநொச்சி இரணைமடுக்குளம் 1000 மில்லியன் ரூபா செலவில் புனரமைக்கப்படவுள்ளது. இவ்வாறு கிளிநொச்சி அரச அதிபர் திருமதி றூபாவதி கேதீஸ்வரன் தெரிவித்தார்.

கிளிநொச்சி மாவட்டத்தின் மிகப் பெரிய குளமாக இரணைமடுக்குளம் விளங்குகின்றது. இந்தக் குளத்தின் கீழ் ஆயிரக்கணக்கான ஏக்கர் நெல் வயல்கள் உள்ளன. மேலும் யாழ்ப்பாணத்துக்கான குடிதண்ணீரை இந்தக் குளத்திலிருந்து எடுத்துச் செல்லும் திட்டங்களும் வகுக்கப்பட்டுள்ளன.

இந்த நிலையில் குளத்தின் புனரமைப்புத் தொடர்பான அறிவிப்பு அரச அதிபரிடமிருந்து வந்துள்ளது. மேலும் ஆசிய அபிவிருத்தி வங்கியின் கடன் திட்டத்தின் கீழ் குளத்தின் புனரமைப்புப் பணிகள் மேற்கொள்ளப்படவிருக்கின்றன.

இதேவேளை கல்மடுக்குளம் முழுமையாகப் புனரமைக்கப்பட்டுள்ளது எனவும் அரச அதிபர் மேலும் தெரிவித்தார்.

கிளிநொச்சி மாவட்டத்திலுள்ள மாற்றுவலுவுள்ளோர் சங்கம் இயங்காமல் முடங்கிக் கிடப்பது தொடர்பாகக் கருத்துத் தெரிவித்த அவர்;

சங்கங்களின் செயற்பாடுகளை முன்னெடுப்பது தனிப்பட்ட குழுக்களின் பணியாகும். இவற்றுக்கு அரச செயலகத்தால் உதவிகள் வழங்க முடியாது.

இவற்றின் நடவடிக்கைகளைப் பொறுத்துத் தீர்மானங்கள் எடுக்கப்படுமெனக் கூறினார்.



## கிளிநொச்சி வைத்தியசாலைக்கு 29 மில்லியன் ரூபா மருத்துவ உதவி



கிளிநொச்சி, ஜன.20

கிளிநொச்சி மாவட்ட மருத்துவமனைக்கு 29 மில்லியன் ரூபா பெறுமதியான மருத்துவ உபகரணங்களை இந்தியா அன்பளிப்புச் செய்தது. அந்த நாட்டு வெளியுறுவுத்துறை அமைச்சர் எஸ்.எம்.கிருஷ்ணா கடந்த புதன்கிழமை பகல் 11 மணியளவில் அவற்றை வைத்தியசாலை அதிகாரிகளிடம் கையளித்தார்.

தொடர்ந்து போரால் சேதமடைந்த கிளிநொச்சி சிவபாதகலையகம் அ.த.க. பாடசாலையின் வர்ணம் பூசப்பட்ட கட்டடங்களைத் திறந்து வைத்தார். அதன் பின்னர் இந்திய அரசின் நிதியுதவியும் கிளிநொச்சியில் அமைக் கப்பட்டு வரும் 250 வீடுகளில் கிளி நொச்சி அறிவியல் நகர் பகுதிகளில் அமைக்கப்பட்டு வரும் வீடுகளில் 5 வீடுகளையும் பயனாளிகளிடம் கையளித்தார்.

நிகழ்வில் கலந்துகொண்டு உரையாற்றிய இந்திய வெளியுறவுத்துறை அமைச்சர் எஸ்.எம்.கிருஷ்ணா போரால் பாதிக்கப்பட்ட கிளிநொச்சி, முல்லைத்தீவு, வவுனியா மாவட்டங்களின் மாணவர்களின் கல்வி நடவடிக்கைகளுக்கு இந்தியா தொடர்ந்து உதவும் என்றார்.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு இந்தியா தொடர்ந்தும் முழுமையான உதவிகளை செய்யும் என்றும் கூறினார்.

# கலாம் ஏன் அவசரமாக வருகிறார்?

## சரவணபவன் எம்.பி கேள்வி

இந்தியா மீது தமிழர்கள் முற்றுமுழுதாக அவநம்பிக்கை அடைந்துள்ள இன்று, அப்துல் கலாம் ஏன் அவசரமாக யாழ்ப்பாணம் வருகிறார்? அவர் வந்து சென்ற பின்னராவது ஈழத் தமிழர் தொடர்பான இந்திய நிலைப்பாட்டில் மாற்றம் ஏதாவது ஏற்படுமா? சோனியா காந்தி உள்ளிட்ட இந்தியத் தலைவர்களிடம் கலாம் இங்குள்ள தமிழ் மக்களின் உண்மையான உணர்வுகளை எடுத்துரைப்பாரா?

- இவ்வாறு கேள்விகளை அடுக்கினார் நாடாளுமன்ற உறுப்பினர் ஈ.சரவணபவன்.

வலி.மேற்கு அராலி மாவத்தை விளையாட்டுக் கழகத்தினரால் நடத்தப் பட்ட உழவர் விழாவில் பிரதம அதிதியாகக் கலந்து கொண்டு உரையாற்றும் போதே இவற்றைத் தெரிவித்தார்.

அராலி தெற்கு மாவத்தை விளையாட்டுக்கழகத் தலைவர் கே.துஷ்யந்தன் தலைமையில் நடைபெற்ற இந்த விழாவில் கூட்டமைப்பு நாடாளுமன்ற உறுப்பினர் சரவணபவன் தொடர்ந்தும் கூறியதாவது:

பொங்கு தமிழ் எழுச்சி நிகழ்வைக் கொண்டாடிய நாம் இன்று பொங்கல் விழாவைக் கொண்டாடுகின்றோம். இந்த உழவர் விழா பல வீர விளையாட்டுக்களை உள்ளடக்கிய தமிழர் திருவிழா. நாம் தன்மானம் உள்ள வீரத் பரம்பரையில் உதித்தவர் கள்.

எமது இளைஞர்களுக்குப் பயிற்சிகளையும் உற்சாகத்தையும் வழங்கி நமது ஆயுதப் போராட்டத்தை ஆரம்பித்து வைத்ததே இந்தியாதான். அதே வேளை அதே ஆயுதப் போராட்டத்தை ஒழிக்கவும் இலங்கை அரசுக்கு துணை நின்றதும் இந்தியாதான்.

இலங்கை வரும் இந்திய வெளிவிவகார அமைச்சர் கிருஷ்ணா தமிழ்த் தேசியக் கூட்டமைப்புத் தலைவர் களைச் சந்தித்த பின்னரே அரசுடன் பேசுவார் என்று முன்பு கூறப்பட்டது.

ஆனால் இந்திய வெளி விவகார அமைச்சினால் வெளியிடப் பட்ட உத்தியோகபூர்வ நிகழ்ச்சி நிரலில் இதனை இழுத்தடிப்புச் செய்துள்ளார்.

இதனைச் சுட்டிக்காட்டிக் கேட்டபோது ''இல்லை, இல்லை, தமிழ்த் தேசியக் கூட்டணியினரையும் சந்திப்பார்'' என்று கூறப்படுகிறது.

ஏன் இந்த கண்ணா மூச்சி விளையாட்டு. இது பெரும் சந்தேகத்தை தமிழ் மக்களிடையே எழுப்பி உள்ளது.

இவ்வாறே முன்னாள் ஜனாதிபதி கலாமின் பயணமும் அவரை ஏன் இந்திய அதிகாரிகள் இங்கு அழைத்து வருகிறார்கள்? தமிழர்கள் கொல்லப்பட்ட போது வாயே திறக்காத கலாம் இப்போது இங்கு வந்து என்ன செய்யப் போகிறார். ஈழத் தமிழருக்காக ஒரு சொட்டுக் கண்ணீர் வடித்திருப்பாரா அவர் என்ற கேள்வி எழுகிறது. இங்கே இப்போ எதைப் பார்க்க வருகிறார் கலாம்?

வடபகுதி மக்கள் இப் பொழுது வெள்ளைச் சீருடையணிந்து சிவில் அதிகாரி என்று காட்டிக் கொள்ளும் இராணுவ அதிகாரியின் - ஆளுநரின் - பிடிக்குள் சிக்கிச் சீரழிகின்றனர்.

ஆட்டைக் கடித்து , மாட்டைக் கடித்து இப்பொழுது தமிழ் மக்களின் பெரும் சொத்தான கல்வியிலும் மூக்கை நுழைத்து விட்டார் அவர்.

தகுதியும் திறமையும் உள்ள கல்வி நிர்வாக சேவை அதிகாரிகள் சுதந்திரமாக செயற்பட முடியவில்லை. ஆளுநரின் அடாவடி உத்தரவுகளை நிறைவேற்றும் தலையாட்டி பொம்மைகளாக அவர்கள் நடத்தப்படுகின்றனர்.

அகில இலங்கை ரீதியில் யாழ்ப்பாணத்தைச்சேர்ந்த ஒரு தமிழ் மாணவன் முதலாம் இடத்துக்கு வந்துவிட்டது இவர்களுக்குப் பெரும் எரிச்சலை ஏற்படுத்தியுள்ளது. இதனால் கல்வி வளர்ச் சியையும் சீரழிக்க முனைகின்றனர்.

அரசு மாகாணக் கல்வி வளர்ச்சிக்கு ஒரு சதவீதத்தை மட்டுமே ஒதுக்கியுள்ளது. இது யானைப் பசிக்கு சோளப் பொரியை போட்டது போன்றது. எமது பெற்றோரும் பழைய மாணவர்களும் சுயமாகவே முன் வந்து எமது பாடசாலைகளுக்கும் மாணவர்களுக்கும் பெருமளவில் உதவுகின்றனர்.

இதனைக்கூடக் கண்டு பொறுக்க முடியாத ஆளுநர் எந்த ஒரு பாடசாலை அதிபரும் தனது அனுமதியின்றி எந்த ஒரு உதவியையும் எவரிடமும் பெறக்கூடாது எனக் கட்டளை இட்டுள்ளார்

தென்னிலங்கை அரசுகள் முன்பு தமிழர்களின் கல்வி யில் கை வைத்ததாலேயே இளைஞர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். அதேபோன்ற ஒரு நிலையை மீண்டும் உருவாக்க முனைகின்றார் ஆளுநர். அதற்கு துணை போகின்றார் அமைச்சர் டக்ளஸ் தேவானந்தா.

மீளக்குடியமர்ந்த மக்களுக்கு இந்திய அரசு வழங் கிய 1,500 சைக்கிள்களில் 500 சைக்கிள்களை சிங்கள வர்களுக்கு வழங்கிவிட்டார் ஆளுநர். எஞ்சிய ஆயிரம் சைக்கிள்களையும் அப்படியே அபகரிக்க முயன்றார் அமைச்சர் டக்ளஸ். இப்பொழுது இந்த மோசடி அம்பலமாகிவிட்டது.

இத்தகைய அடக்குமுறைகளுக்கு எதிராக பாதிக் கப்பட்ட மக்கள் ஒற்றுமையாகக் குரல் எழுப்ப வேண்டும். அஞ்சக் கூடாது.

நல்லிணக்கம், இணக்க அரசியல் என்று இலங்கை அரசும் அமைச்சர் டக்கிளசும் நமது முதுகில் குத்துகின் றனர். தொடர்ந்தும் நம்மை அடிமைப் படுத்துவதிலேயே இலங்கை அரசு தீவிரமாகச் செயற்படுகின்றது.

அதேவேளை எமது விடயத்தில் இந்தியாவும் நேர்மையாக நடக்காதது பெரும் கவலையாகிறது.

இப்படியான ஒரு சூழ லில் இந்தியாவின் முன்னாள் ஜனாதிபதி யாழ் வருகின்றார். அவர் பல்லைக்கழகத் துக்கும் இந்துக் கல்லூரிக்கும் வருகை தரவுள்ளார். இந்தக் கல்விமானின் வருகை ஏதாவது ஒரு மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும் என எதிர்பார்க்கிறோம். அப்படி இல்லை எனில் வேறு எந்த இந்தியரும் வடக்கே வராத படிக்கு செய்து விட வேண்டும் - என்றார் சரவணபவன்.

இந்த விழாவில் வலி. மேற்குப் பிரதேச சபை தலைவர் திருமதி ஐங்கரன், பேராசிரியர் சிற்றம்பலம் ஆகியோரும் உரையாற்றினர்.

# இலங்கை மற்றொரு சிங்கப்பூராக மாறுமா?

தமிழில்: வீ.எஸ்.ரீ.

இலங்கையை மற்றொரு சிங்கப்பூராக மாற்றி அமைப்பது எமது குறிக்கோள்'' இது அடிக்கடி இந்த நாட்டின் அரச உயர் தலைவர்கள் மேடையில் முழங்கிவரும் "வாய்ச் சவடால்".

அப்படிப்பட்ட நிலையில் தனிப்பட்ட பயணமாக சிங்கப்பூருக்குச் சென்று திரும்பியிருக்கும் சிங்கள ஊடகவியலாளர் ஒருவரின் அனுபவப் பகிர்வு இது.

"இலங்கை மற்றொரு சிங்கப்பூர் ஆக இயலுமா?''

''சிங்கப்பூரின் புகழுக்கும் அதன் மகிமைக்கும் என்ன காரணம்?''

இந்த இரண்டாவது கேள்விக்கான விடையை முதலில் பார்க்கலாம்.

சிங்கப்பூரின் புகழுக்கான முதலாவது காரணம், மாசுமறுவற்ற, லஞ்சம், ஊழல் எதுவுமற்ற சிறப்பான அரசியல் நிர்வாகம்.

இரண்டாவது காரணம், சட்டமும் ஒழுங்கும் எந்தவொரு தலையீடுமின்றி முறைப்படி உரிய வகையில் செயற்படுத்தப்படும் நிலை.

மூன்றாவது காரணம், சிங்கப்பூரில் வாழும் சகலரதும் அர்ப்பணிப்பு உணர்வுடனான செயற்பாடுகள்.

இந்தப் பதிலை நான் சொல்லவில்லை. "சிங்கப்பூரின் புகழுக்கு என்ன காரணம்'' என்று நான் கேட்ட கேள்விக்கு தனது கைவிரல்களை ஒவ்வொன்றாக மடக்கிக் கணக்கிட்டவாறு அந்த வாடகைக் கார் சாரதி தெரிவித்த பதில். பதிலளிக்கும்போது சாரதியின் முகத்தில் பெருமை பரவியிருந்தது.

ஒரு நாள் மாலை, எட்டு மாடிகள் கொண்ட கட்டடத்தொடர் ஒன்றின் மேல்தளத்தில் உருவாக்கப்பட்டிருக்கும் ஆகாயத் தோட்டத்தைப் பார்வையிடச் சென்றேன். நான் தங்கியிருந்த விடுதியிலிருந்து அங்கு செல்ல அமர்த்திய வாடகைக் காரில் சென்று கொண்டிருந்தபோதே சாரதியும் நானும் உரையாடிக் கொண்டோம். சாரதியின் பதில் எனக்கு வியப்பை ஏற்படுத்தியது.

ஒரு வகையில் அந்தச் சாரதி கூறிய சிங்கப்பூரின் மகிமைக்கான காரணம் தெளிவான ஒன்றுதான். முதலாளித்துவ ஜனநாயக முறைக்கான உதாரணமாக சில விமர்சகர்கள் சிங்கப்பூரைக் குறிப்பிடுவதுண்டு. அதேபோன்று சிங்கப்பூர் மக்கள் சமூகமும் குறைந்ததல்ல. உலகத்திலுள்ள ஏனைய மக்கள் சமூகத்துக்கு முன்னுதாரணமாக அடையாளப்படுத்த அதற்கு முழுத் தகுதியும் உள்ளது என்பதை நான் அங்கு தங்கியிருந்த ஒரு சில நாள்களில் புரிந்து கொண்டேன்.

உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் வந்து அங்கு தங்கி வாழும் மக்களை உள்ளடக்கிய அந்தச் சின்னஞ் சிறிய நாடு, ஒழுக்கம், கட்டுப்பாட்டால் சர்வதேசத்திலும் புகழ் நாட்டியுள்ளது. பரந்த சுயாதீனமான திட்டமிடல்களால் தன்னை உயர்த்திக் கொண்டுள்ளது.



வானுயர்ந்த கோபுரங்களால் மட்டும் இலங்கை சிங்கப்பூராகிவிடாது.

''1970களிலேயே சிங்கப்பூர் உலக அரங்கில் தன்னை வெளிக்காட்ட ஆரம்பித்தது. நாட்டின் பிரதமரான 'லீகுவான்யுகே'யின் நிர்வாகத்தில் எந்தவொரு ஊழல், லஞ்ச செயற்பாடுகளுக்கும் இடமிருக்கவில்லை. இதனால் நாடு துரித வளர்ச்சி கண்டது'' .

அந்த வாடகைக் கார் சாரதி தெளிவான உறுதியான குரலில் பேசினார். ''சட்டம் எங்கும் எவருக்கும் சமமானதே'' என அந்தக் காரின் உட்புறக் கண்ணாடியில் பொறிக்கப்பட்டிருந்த வாசகம் அந்த நாட்டின் சட்டம் ஒழுங்கு பேணப்படும் நிலையை எனது கண் முன்னால் நிரூபித்தது. அது அந்த நாட்டின் வளர்ச்சிக்காக, உயர்ச்சிக்காக அர்ப்பணிப்பு உணர்வுடன் செயற்படும் அரசியல்வாதிகளினால் உருவாக்கப்பட்ட பழக்க வழக்கமாகும்.

லட்சக்கணக்கான அதி நவீன மோட்டார் வாகனங்கள் இரவு பகலென்ற பேதம் எதுவுமின்றி தினமும் பயணிக்கும் சிங்கப்பூரின் அதிவேக பெருந்தெருக்களில் ஒரு தடவையாவது வாகன 'ஹோர்ண்' ஒலியை நான் கேட்டதில்லை. எந்தவொரு சந்தர்ப்பத்திலும் பாதையைக் குறுக்காக எவராவது ஒருவர் கடக்க முயன்றதை நான் கண்டதில்லை. சத்தம்

> சிங்கப்பூரின் புகழுக்கான முதலாவது காரணம், மாசுமறுவற்ற, லஞ்சம், ஊழல் எதுவுமற்ற சிறப்பான அரசியல் நிர்வாகம். இரண்டாவது காரணம், சட்டமும் ஒழுங்கும் எந்தவொரு தலையீடுமின்றி முறைப்படி உரிய வகையில் செயற்படுத்தப்படும் நிலை. மூன்றாவது காரணம் சிங்கப்பூரில் வாழும் சகலரதும் அர்ப்பணிப்பு உணர்வுடனான செயற்பாடுகள்.

போட்டு பாதசாரிகளைக் கூவியழைத்து பொருள்கள் விற்ற நடைபாதை வியாபாரிகள் எவரையும் நான் கண்டதில்லை.

அவதானத்துடன் தேடிப் பார்த்தும் ஒரு பிச்சைக்காரரைக் கூடக் கண்ணால் காணவில்லை. நடைபாதையில் நடந்து செல்ல நேர்ந்த எந்தவொரு சந்தர்ப்பத்திலும், நடைபாதை ஓரத்தில் நிலத்தில் ஒரு சிறு துண்டுக் காகிதம் வீசி எறியப்பட்டிருந்ததை நான் கண்டதில்லை.

மனிதர்கள் ஒவரோடு ஒருவர் உரத்த குரலில் வாக்குவாதப்படுவதை அந்த நாட்டில் தவறான பழக்கமாகக் கருதுகின்றனர். சாதாரண இலங்கையர் சிங்கப்பூர் கடைகளில் பொருள்களைக் கொள்வனவு செய்யச் செல்லும்போது சிர்மத்துக்கு உள்ளாக நேரிடும். சிங்கப்பூரின் நாணயப் பெறுமதி, இலங்கையின் நாணயப் பெறுமதியைவிட அதிகம் என்பதே இதற்குக் காரணம்.

ஆனாலும் என்னால் மற்றொரு விடயத்தைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிந்தது. அது சிங்கப்பூரில் வயதானவர்கள் தமது வாழ்க்கையைக் கழிப்பதற்குச் சிரமப்படவேண்டியுள்ளது என்பதேயாகும். ஏனெனில் வயதானவர்கள்கூட எப்படியும் ஏதாவது தொழில் ஒன்றைச் செய்ய வேண்டிய நிலை இருக்கிறது. ஆனாலும் உழைக்க வேண்டுமென்ற உண்மையான உணர்வுடன் அவர்கள் இயங்குகின்றனர்.

பௌதீக அபிவிருத்தி குறித்த அக்கறைக்கு மேலாக ஆத்மார்த்த ரீதியிலான வாழ்வுமுறை குறித்த விருப்பு சிங்கப்பூர் மக்களிடம் போதியளவு இல்லையா? என்று மனம் சிந்திக்கத் தலைப்பட்டது. இது குறித்தும் அந்த வாடகைக் கார்ச் சாரதியிடம் வாய்விட்டுக் கேட்டேன்.

''மதம் என்பது ஒவ்வொருவரது தனிப்பட்ட விருப்புக்கு ஏற்றதொன்றல்லவா? அரசு, மதம் தொடர்பாக எந்த வகையிலும் தலையிடுவதில்லை. மத விடயத்தில் சுதந்திரம் எமக்குண்டு. பௌத்த மதப் பிரிவுகள்கூட ஒன்றிரண்டல்ல, பலவுண்டு'' என்றார் அந்தச் சாரதி.

நான் பயணித்த அந்த வாடகைக் காரின் சாரதி இருக்கைக்கு முன்புறம் வித்தியாசமான தோற்றத்தில் அமைந்த பளிங்கிலான புத்தர் உருவச் சிலையொன்று தொங்கவிடப்பட்டிருந்தது. அது அவர் பின்பற்றும் மதத்துக்கான கடவுளின் உருவம் என விளக்கம் தந்தார். நான் அவதானித்த வகையில் சிங்கப்பூரின் சகல வாடகைக் காரோட்டிகளின் பேச்சில் ஒரு சாந்தமும் பணிவும் கலந்திருந்ததை உணர முடிந்தது. பயணமுடிவில் 'மீற்றர்' காட்டும் தொகைக்கான அச்சிட்ட ரசீது பயணிகளுக்கு வழங்கப்படுகிறது. குறிப்பிட்ட பயணத்தின்போது ஏற்படும், ஏற்பட்ட அசௌகரியங்கள் குறித்து முறையிடுவதற்காக முறைப்பாட்டுத் தொலைபேசி இலக்கமும் அந்தப் பற்றுச்சீட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

எமது நாட்டில் இத்தகைய நாகரீகமான, பண்பாடான நடைமுறை செயற்படுத்தப்பட இன்னமும் பல ஆண்டுகள் காலம் செல்லும் எனச் சிந்திப்பதில் தவறேதும் இருக்கமுடியாது. எமது இந்தப் பண்பாட்டுப் பின்னடைவுக்கான காரணம் நாம் மேற்குறிப்பிட்ட சிங்கப்பூர் மக்களது சீரான ஒழுங்கான, கலாசார பண்பாட்டுப் பழக்கவழக்கங்களுக்கு முற்றிலும் எதிர்மறையான போக்கில் செயற்படுதலே ஆகும். அந்தச் சிங்கப்பூர் வாடகைக் காரோட்டி விரல் மடித்துக் காரணம் கற்பித்த விதத்தில் இதனைக் கூறுவதானால் எமது பண்பாட்டுப் பின்னடைவுக்கான காரணங்கள் பலவுண்டு.

முதலாவது காரணம் ஊழல் மலிந்த அரசியல் செயற்பாடுகள். இரண்டாவது, எந்தவொரு துறையிலும் சட்டமும் ஒழுங்கும் முறைப்படி பேணப்படாமை. மூன்றாவது, நாட்டின் உயர்மட்டத்தில் உள்ளவர்கள் முதல் கீழ் மட்டத்தில் உள்ளவர்கள்வரை அர்ப்பணிப்பு உணர்வுடனும் நேர்மையுடனும் செயற்படாமை.

ஆகாயத்திலிருந்து நோக்கும்போது பச்சை நிற மரகதக் கல் போன்று அழகுறத் தோற்றமளிக்கும் இலங்கைத் தீவுக்கு, சுதந்திரம் பெற்ற நாள் முதல் பொய்யும் புரட்டும் மிக்க ஏமாற்று அரசியலே சொத்தாகி விட்டது. அதிலிருந்து மீள முடியாது தத்தளிக்கிறது. இன்று இந்த நாட்டின் தேர்தல் நடைமுறை எந்த அளவுக்குச் சீர்கெட்டுப் போயுள்ளது என்பதை நாம் அறிவோம். அது உண்மையான ஜனநாயக நடைமுறையில் அமைந்த ஒன்றல்ல. அதிகார அரசியல் ஆசையால் வந்தது. தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்கள் ஒருவரை ஒருவர் நாகரீகமற்ற வார்த்தைகளால் விமர்சிப்பதைக் கண்டு முகம் சுழிக்கிறோம்.

சிங்கப்பூரில் எத்தகைய அரசியல் நடைமுறை உள்ளது என்பது குறித்த விவரிப்பதில் எவ்வித பயனும் இல்லை. ஆசியாவை நடு நிலைப்படுத்தி உருவாக்கப்பட்ட உலக வர்த்தக சந்தையில் தென்கொரியா, சீனா, வியட்நாம், தாய்லாந்து ஆகிய நாடுகளுக்குச் சமமான நிலையை சங்கப்பூரும் வகிக்கும் விதத்தில் சுதந்திர வர்த்தக நடைமுறையில் சிங்கப்பூரும் இணைந்துள்ளது.

நவீன தொழில்நுட்ப ரீதியில் மின்பொருள்களை உற்பத்தி செய்வதற்குப் புதிய நவீன கல்வி முறையைச் சிங்கப்பூர் கடைக் கொண்டு வருகிறது. அதேசமயம் நேரடி வரிக் கொள்கையை நடைமுறைப்படுத்துவதன் மூலம் இந்திய முதலீட்டாளர்களுக்கும் தனது வர்த்தகச் சந்தை வாய்ப்பை சிங்கப்பூர் அரசு வழங்கியுள்ளது.

உலகின் வர்த்தக மையத் தொடரான முஸ்தாபா வர்த்தக மையத்தில் ஆயிரத்துக்கும் அதிகமான இந்தியர்கள் தொழில் செய்கின்றனர். சிங்கப்பூர் அரசு இவ்விதம் சகல வர்த்தகச் செயற்பாடுகளுக்கும் ஒரு சீரமைத்த வகையில் வசதி வாய்ப்புக்களை வழங்குவதன் மூலம் சிங்கப்பூரின் வெளிநாட்டுச் செலாவணியைப் பெருமளவில் தேடிக்கொள்கிறது.

திறந்த பொருளாதார நடைமுறையின் கீழ் இந்த நாட்டின் பெரும்பாலான வர்த்தக நடவடிக்கைகளில் சிங்கப்பூர் அரசின் அமைச்சர்களே சம்பந்தப்பட்டுள்ளனர். அவர்களது உறவினர்கள் பலர் பெரும் வியாபார நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகின்றனர். ஆனால் நாட்டின் எதிர்காலப் பயணத்துக்கு குறிக்கோள்களுடனான செயற்பாடுகள் அவசியமானவை என சிங்கப்பூர் பொது மக்களுக்கு எடுத்துக்கூறி வருபவர்களும் அத்தகைய அரச உயர்மட்ட அமைச்சர்கள் மற்றும் அதிகாரிகளே. அந்த அளவுக்கு அரசின் சட்ட திட்டங்களுக்கு, அபிவிருத்திக்கு மதிப்பளித்து, அவற்றைப் பின்பற்றிச் செயற்பட அவர்கள் எப்போதுமே பின் நிற்பதில்லை.

கொழும்பு வலயத்தில் அமைந்துள்ள அரச திணைக்களங்கள் மற்றும் அமைச்சுக் கட்டடங்களைச் சூழ எந்த அளவுக்கு வெற்று நிலம் அமைந்திருக்கிறது என்பதை எவராவது எண்ணிப் பார்க்கின்றார்களா? அத்தகைய வெற்று நிலங்களுக்குப் பொறுப்பான அமைச்சர்களோ, அமைச்சுகளின் செயலாளர்களோ, நகர சபைகளோ, அல்லது அவற்றில் கடமையாற்றும் அரச ஊழியர்களோ அது குறித்து ஏதாவது அக்கறை செலுத்துகிறார்களா?

அது போன்றே கிராம மட்ட அரச நிறுவனங்கள் செயற்படும் கட்டடங்களைச் சுற்றியுள்ள வெற்று நிலத்தை ஏதாவது ஒரு வகையில் பயிர்ச்செய்கைக்கு உட்படுத்த

(19ஆம் பக்கம் பார்க்க)

# ஆயிரம் கனவுகளும் பலித்துவிடுமா...?



ஒவ்வொரு பெண்ணுக்குள்ளும் கனவுகள் உள்ளன. வாழ்வில் ஆயிரம் கனவுகளுடன் வாழ்பவள்தான் பெண். இந்தக் கனவுகள் சிதறிக்கப்படும் போது ஏன் எதற்கு இப்படி எல்லாம் நடக்கிறது என்று கூடச் சிந்தித்து உணரமுடியாதவர்களாக உடைந்து போகின்றார் பெண்கள்.

அது கல்வியாக இருந்தாலும் சரி, காதலாக இருந்தாலும் சரி ,வாழ்வாக இருந்தாலும் சரி. உறவுகளின் அரவணைப்பும் அன்பும் ஒரு பெண்ணுக்கு மிகமிக அவசியமாகின்றன. தன்னுள் ஏற்பட்ட ஏமாற்றங்களை வெளியே சொல்ல முடியாமலும் தமக்கென்ற ஒரு வரையறையுடன் எமது கலாசார விழுமியங்கள் தழுவியதாக ஒரு பெண்ணின் செயற்பாடுகள் தொடருமானால் எவரும் கைநீட்டிக் கேள்வி கேட்டுவிட முடியாது. நான் சரி, நான் பயணிக்கும் பாதை சரி என்று ஒரு தீர்மானத்துடனான பயணமாகப் பெண்களின் வாழ்க்கைப் பயணம் தொடர வேண்டும்.

மூன்றாவது நபர் எமது மூக்கைத் தொட்டுவிட்டுப் போகுமளவுக்கு விடுவோமேயானால் கேள்விக்குறியான வாழ்க்கை நிலையை எதிர்கொள்ள வேண்டிவரும் என்பது தெட்டத் தெளிவு.

பெண் என்று பிறந்துவிட்டால் செல்லும் வழி எங்கும் ஆயிரம் நெளிவு சுழிவுகள் வரத்தான் செய்யும். அதற்காகத் தளர்ந்து போவது என்பது எந்தவகையில் நியா யம் என்பதை உணர்ந்து கொள் ளுங்கள். அன்பும் அரவணைப் பும் ஒரு பெண்ணிடமிருந்தே முழுமையாகக் கிடைக்கின்றன.

அது தாயாக இருந்தாலும் சரி, தாரமாக இருந்தாலும் சரி, காதலியாக இருந்தாலும் சரி. ஆனால் இங்கு உண்மை, புரிந்துணர்வு, எதிர்பார்ப்புக்கள் மிகவும் அவசியமானவை ஆகின்றன. இவை பூரணமடை யும் போதுதான் நமது எதிர்பார்ப்பும் நிறைவடையும். இதை உணரத் தவறியவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

அவள் பெண்தானே! கேட்டால் என்ன, தந்தால் என்ன, என்ற எண்ணமும், இவர்கள் எமது உறவுகள்தானே கேட்பார்கள்தானே என்று ஒரு பெண் எண்ணுவதும் உறவுக ளிடையே விரிசலைத் தூண்டிவிடக்கூடும். என்னதான் எதிர்பார்ப்புக்கள், ஆசைகள், தேவைகள் இருப்பினும் வார்த்தைகள் மூலமே அவை பூரணம் அடையும் என்பதை ஒவ்வொருவரும் உணர்தல் நன்றே. மனம்விட்டுப் பேசுவதும் பிரச்சினைகளைத் தெளிவுபடுத்துவதும் அன்புக்கும் உறவை வலுப் படுத்தவும் வழிகோலும். பெண்களே! சிந்திப்போம் ஒரு கணம்.

நிஷாந்தன்,
சங்கானை

# ஏற்க மறுப்பு



வானத்தில்
கோடிக் கணக்கில்
நட்சத்திரங்கள்
சிரித்தாலும்
குளிர்மையும் ஒளியும்
சந்திரனால் மட்டும்தான்
இதை ஏற்க
நினைக்கிறாய்
ஆனால்....
ஒரு பெண்ணின்
ஊக்குவிப்பு
அரவணைப்பு,
அன்பு, நிறைவு
இவற்றால் ஏற்படும்
மகிழ்வை
ஏன் ஏற்க மறுக்கிறாய்?
காலங்காலமாய்
இது தொடர்கதையா...
காலனவனால்
மாற்றி வைக்கப்படுமா?
ஆயிரம் கேள்விகளுக்கு
நடுவில் இன்று நான்....

குட்டி நிஷா
சங்கானை.

# இதற்கு உன் பதில் என்ன?



பெண்ணை மறுத்தாலும்
பெண்ணினத்தை
வெறுத்தாலும்
உன்னைப் பெற்றவள்
உன்னைச் சீராட்டியவள்
கட்டியணைப்பவள்
கண்கலங்கி நிற்பவள்
எல்லாமே ஒரு
பெண்தான்
இதற்கு உன்
பதில் என்ன
மௌனம்தானா....?

நிஷாவதி
நல்லூர்.

# உரிமைக் குரல்



பெண்ணே!
கவிக்கோவின்
கருத்துப்படி
படைத்தவளுக்குரியவள்
நீதான்
எம்மை எழுதத்தூண்டும் நீ
எழுதினால் இன்னும் நன்மையே
நயமும் நவரசமும்
உன் குழந்தைகளே
அச்சமும் வெட்கமும்
உன் கைகளை
அழுத்துகின்றனவா?
அந்தக் கட்டுப்பாடுகளை
எரியூட்டு
பிரச்சினைகளாலே
பொதிசெய்யப்பட்டவளே
அபத்தம் என்று நினைத்தா
எழுத்தாணியை
ஒளித்து வைத்திருக்கிறாய்?
எடு! போராடு
ஆணுக்கு சமமாக நில்
உனக்கொரு படை திரட்டு
உயிர்த்தமிழ் வாழட்டும்

க.யோகேஸ்வரன், நெடுந்தீவு,

# ஜெகத் ஜோதி



கற்பகதருவே நீயன்றி நாம் இல்லை உன் இடர்பாடுகளை ஒரு கோடி செவிகளுக்குச் சொல்லிவிடு. அதில் ஒரு சோடி செவிகளாவது பதில் சொல்லும். உரிமைகளைப் பற்றி உரத்துச் சொல்பவர்கள் கூட அதைக் கொடுப்பதேயில்லை. வீட் டில் மனைவியைப் பூட்டி வைத்து விட்டு வேலைக்குச் செல்பவர்கள் அதிகம். பெண்ணே எரிந்து கொண்டிருப்பவள் நீ. உன்னைப் பயன்படுத்த இந்த மூடர்களுக்குத் தெரியவில்லை.

வஞ்சகம் இன்றி நீ செய்யும் சேவைகளுக்கு விஞ்ஞான விளக்கம் கேட்பவர்களே இந்த ஆண்கள். தங்களுக்கு மட்டும் அழகாக இருக்கவேண்டும் என்று எண்ணுபவர்கள் தாங்கள் அழுக்காக இருப்பதை உணர்வதேயில்லை. மனிதப் பிறவியில் புரிந்துகொள்ளல் பெண் களுக்கே உரித்தானது என்பது கண்டுபிடிப்பு. விகிதாசாரப்படி அதிகம் ஏமாந்து போவதும் நீங்கள்தான்.

மென்மைத்தனம் உன்னிடம் இருக்க வேண்டும். அதில் பயத்தின் சாயம் பூசப்படக் கூடாது. அடங்கி இருப்பதற்காகவே பிறந்துவிட்டோம் என்பது மடமை. இது இருபத்தோராம் நூற்றாண்டு. வெளியில் வராமல் இருக்கிறோம் என்பதற்காக வெட்கப்படு. முகவரியைத் தொலைத்துவிடப்போவதை நினைத்து அச்சப்படு.எல்லை மீறாத காதலைக் கண்டுகொள். தனித்தன்மையைக் காப்பாற்றத் தோள் கொடுக்கும் ஆடவனைக் கண்டுபிடி. வேதனையை அடுப்போடு போட்டு சாம்பலாக்காதே. இது விஞ்ஞான உலகம். விந்தை செய்! மந்தையாய் இருந்தது போதும். மந்திரக் கோலோடு உலகத்தை ஆட்டுதல் செய்! சுட்டுவிரல் நீட்டு! சூட்சுமத்தைக் கண்டுபிடி! குங்குமமும் தாலியும் உன் இலட்சணங்கள். இரத்ததுளிகளல்ல!

நெடுந்தீவு
க.யோகேஸ்வரன்



# சிறுவர் சுடர்





## ஆட்டை அவிழ்த்து விடு!

ஏழை யூதர் ஒருவர் தன் மத குருவிடம் சென்று, குருவே, வீட்டில் கூட்டம் தாங்க முடியவில்லை. நான், என் மனைவி, 5 குழந்தைகள், என் பெற்றோர் என 9 பேர் ஒரு சின்ன அறையில் வசிக்கிறோம் என்றார். அதற்கு மத குரு, இவர்களோடு உன் ஆட்டையும் அந்த அறை யில் கட்டிவை என்றார்.

ஆலோசனை கேட்டவருக்கு ஒன்றும் புரியவில்லை.

மத குருவின் வாக்கு ஆயிற்றே. தட்ட முடியுமா? எனவே, ஆட்டையும் தனது வீட்டின் அறையில் கட்டி வைத்தார்.

அவதி மேலும் அதிகமாகிவிட்டது.

பத்து நாள்களாயிற்று. யூதர் மீண்டும் மத குருவைக் காண வந்தார். என் வீட்டில் வசிக்கவே முடியவில்லை. தாங்கள்தான் ஏதாவது ஒரு வழி கூறவேண்டும் என்று வேண்டினார்.

உடனே மத குரு, ஆட்டை அவிழ்த்துவிடு என்றார். அவ்வளவுதான். யூதர் தன் வீட்டுக்கு உடனே ஓடிச் சென்று ஆட்டை அவிழ்த்து, வெளியே விட்டார். அதற்குப் பின்பு அவர் மனம் மகிழ்ச்சியுற்றது.

ஆஹா! ஆடுபோன பின் வாழ்க்கை எத்தனை இன்பமாக இருக்கிறது. குருவின் யோசனையே யோசனை என்று குருவைப் புகழ்ந்தார். இன்று மனிதன் கவலையின் கைதியாக இருக்கிறான், மன நிறைவின்மையே கவலைக்கு காரணம். ஆனந்தத்தின் ஆதாரம் அவனிடமே இருக்கிறது.

## நாடுகள் அறிவோம் - ஜப்பான்

**(கடந்த வாரம் வெளியாகியதின் இறுதிப் பகுதி)**

*கி.மு. 660ல் ஜப்பானின் முதல் பேரரசராக ஜிம்மு டென்னோ என்பவர் ஆட்சி பொறுப்பேற்றார். கி.பி. 12 ம் நூற்றாண்டு வரை பேரரசர்களின் ஆதிக் கத்தில் ஜப்பான் இருந்தது. அதன் பிறகு ஷோகன்ஸ் என்ற இராணுவப்படை யினர் மன்னரை வீழ்த்தி ஆட்சி அதிகாரத் தைக் கைப்பற்றினர்.*

*இவர்கள் பெரும்பாலும் கொடுங்கோல் ஆட்சிதான் புரிந்து வந்தனர்.*

*1543ம் ஆண்டில்தான் ஐரோப்பியர்கள் ஜப்பானில் காலடி எடுத்து வைத் தனர். கூடவே கிறிஸ்துவ மதத்தையும் மற்றும் புதிய புதிய ராணுவத் தளபாடங்களையும் ஜப்பானுக்கு அறிமுகப்படுத்தினர். ஆனால் 1635 ல் ஷோகனஸ் ராணுவ அடக்குமுறையால் ஜப்பானுக்கு வெளிநாட்டினர் வருவதற்கும் ஜப்பானிலிருந்து மக்கள் வெளிநாடுகளுக்கும் செல்ல தடை விதிக்கப்பட்டது. இந்த தனிமைப்படுத்தல் 200 ஆண்டுகள் நீடித்தது. 1868ம் ஆண்டு ஷோகன்ஸ் ஆட்சி வீழ்ச்சி யுற்றது. பேரரசர்கள் மீண்டும் ஆட்சிக் கட்டிலில் ஏறினர். இதன் பிறகுதான் ஜப்பானில் பெரிய மாற்றங்களும் தொழிற்புரட்சியும் ஏற்பட்டன. பெருமளவு நவீனமயமாக்கப்பட்டது ஜப்பான்.*

*முதல் உலக மகா யுத்தத்தின்போது (1914 1917) ஜப்பான் அமெரிக்க ஐக்கிய நாடுகளுடன் கூட்டுச் சேர்ந்து போரிட்டது. ஆனால் இரண்டாம் உலக மகா யுத்தத்தின்போது (1941 1945) இதே ஜப்பான் அமெரிக்காவுக்கும் நேசப்படைகளுக்கும் எதிரணியில் சேர்ந்து போரிட்டது. 1945 ம் ஆண்டு அமெரிக்கப் படை ஜப்பானின் ஹிரோஷிமா, நாகசாகி ஆகிய நகரங்களில் அணுகுண்டுத் தாக்குதல் நடத்தி (அப்போதுதான் உலகிலேயே முதன் முறையாக அணுகுண்டு பயன்படுத்தப்பட்டது) பேரழிவை ஏற்படுத்தியது. ஏறக்குறைய 1,15,000 மக்கள் இத்தாக்குதலில் மாண்டு போனார்கள். இந்தத் தாக்குதலின் பாதிப்பு இன்றுவரை தொடர்கிறது. இந்தத் தாக்குதலுக்குப் பிறகு ஜப்பான் சரணாகதி அடைந்தது.*

*இரண்டாவது உலக மகா யுத்தத்தினால் பெரிதும் பாதிக்கப்பட்டாலும் தங்களுடைய விடாமுயற்சியாலும் கடும் உழைப்பினாலும் தங்கள் நாட்டை உலகின் இரண்டாவது பொருளாதார வளர்ச்சிமிக்க நாடாக மாற்றியிருக்கிறார்கள். ஜப்பானில் தயாராகும் எலக்ட்ரானிகள் சாதனங்கள் உலகெங்கும் விரும்பி வாங்கப்படும், நீண்ட நாள்கள் உழைக்கும் கருவிகளாக இருக்கின்றன.*

### உணவுப் பழக்கம்

*ஜப்பானியர்களின் உணவுப் பழக்கம் மேற்கத்திய நாடுகளின் வழக்கத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது. உணவில் அதிக அளவு அரிசி, மீன், காய்கறிகள் சேர்த்துக் கொள்வார்கள். அசைவ உணவுகளை மிகவும் குறைவாகவே சாப்பிடுவார்கள். கொழுப்புச் சத்து குறைவான உணவையே விரும்பிச் சாப்பிடுவதால் நல்ல உடல் ஆரோக்கியத்துடன் வாழ்கிறார்கள். இதனால் ஜப்பானியர்கள் மற்ற எந்த நாட்டு மக்களையும் விட மிக அதிக நாட்கள் வாழ்கின்றனர்.*

**ஆட்சிமுறை :** மன்னராட்சி மற்றும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனநாயக ஆட்சி முறை.

**மக்கள் தொகை :** 12,74,63,611 ,
**நாணயம் :** யென்,
**மலைகள் :** ஜப்பனீஸ் ஆல்ப்ஸ்,,

**ஆட்சிமொழி :** ஜப்பனீஸ்
**பரப்பளவு :** 3,77,835 சதுர கி.மீ.
**நதிகள் :** பிவா, இனாவாஷிரோ,





இரண்டு படங்களுக்கிடையேயும் ஆறு வித்தியாசங்கள் உள்ளன. முயற்சி செய்து கண்டுபிடியுங்கள்.



# கவிதைப் பனல்

## தீட்டிய காகமும் திறந்த வெளிமாடுகளும்

திண்ணைகளில், வெற்றிலைக் குதப்பல்களோடு
தெறித்து விழுந்தன உண்மைகள்
"ஐக்கிய ஜனநாயக சோஷலிசக் குடியரசின்"
'செங்கோலைச்' செய்த உலோகங்களை
சித்திரப் பரீட்சைக்காய் உரத்து உருப்போகிறாள்!
எப்பவோ எடுத்து வெளியே வைக்கப்பட்ட
தொலைபேசிக்கு,
அழைத்துக் களைத்த பின், அடிக் குரல் கேட்கிறது!
....."இன்டைப் பாட்டுக்கு விளக்கிலேயே படி பிள்ளை!"

கத்தியேந்திய காட்டு மிருகத்தின் வால் கிளைத்த
எட்டுச் செதில் கணுக்களுக்கும், வேறு. அர்த்தமுள்ளதாம்!!
"ஏழாம் அறிவா", வேலாயுதமா" என்று கணித்தவன் தான்,
தேசியக் 'கணிதத்தில்'
.... எட்டாமிடத்திருந்தான் முதல் நாள்.

'அவுட்' டாக்கிய விடைத்தாள் விற்றகாசு
அஸ்திவாரமாகியது சீதன வீடொன்றுக்காய்!
'டென்மார்க்' சம்பந்தம், முன்பொருக்கால்
"டைவர்ஸ்" என்றறிந்த பின்,
நல்லூர் "முருகனும்" கல்லாகவே கிடந்தான்
"முரட்டு நேர்த்திகளின்" முடிவில்!!

உப்புத்தண்ணீரில் குளித்து, உபவாசமிருந்து
படித்தவன் உயர்ந்தான்!
மெத்தவுழைத்திருப்பார்கள், "இரண்டாவதாய்" இறக்கிவிட!
வித்தியாசம் கூடியதால், கைவிட்ட கதை
"உள்ளுக்கும்" தெரியும்!!

"வறுமைதான் வயசுப்பிள்ளைகளை"
வாலிபம் தொலைக்க வீதி"யில் விட்டதென்று
வசனமிழுப்பவர்களின், பிக்கப் "காற்றுக்குறையும்" வரை
கற்களில் படுவதில், 'பித்தம்' வெடிக்காத கால்கள்!
ஒற்றைப்போக,
"வெங்காயமும், பொயிலையும்" போதும்,
"வெஸ்ட்மினிஸ்ரர்" வரை மூன்று வருடங்கள் முடித்து
ஊர் திரும்ப...
"சகலகலாவல்லி மாலை"யின் மேல் சத்தியமிது!

- அரிதேவன்

## ஒரு நெருடல்

மார்கழி மாதம்
இடர்போக்கும்
அதிகாலை நேரம்
திருவெம்பாவை
ஓசையில்
விண்ணிலிருந்து
இறங்கிவந்து
வேதனை போக்கும்
தேவதை போல்
மண்ணில் படரும்
ஓசோன் படலம்

உயிர்களுக்கு
உத்தரவாதம்
பயிர்களுக்கு
உயர் பாதுகாப்பு
உலகின் கவசம்
என்னுமுணர்வில்
உச்சப் பயன்பெற
மூச்சுப்பையை
முழுவதும் நிரப்ப
உயிரணுவில்
புது நெடிலால்
ஒரு நெருடல்

இதுவரை; காலமும்
ஆதிக்க; ஆசையால்
ஆய்வென்றும்
ஆராய்ச்சியென்றும்
ஆரவாரத்துடன்
பெயர் சூட்டி
பாரெங்கும் வீதி
பரிசோதித்த
பாரிய குண்டுகளில்

வாசம் செய்த
நச்சுக் கலவைகள்
நிச்சயமாயிதில்
கலந்திருப்பதை
நன்குணர்ந்து
சிறிதும்; தாமதமின்றி
சுவாசப்பையை
சுருக்கிக் கொண்டதால்
உயிர் பிழைத்தேன்.

க.பிரகாசா
ஜீவானந்தி

## ஏமாற்றம்

சுவாசக்காற்று உட்செல்லும்
என் இதயம் என்னும் பரிஷக்
கூண்டுக்குள் பொன் வண்டாய்
நுழைந்தவன் நீ....
என்னை இன்பச் சிறையில்
வைத்திருப்பாய் என்று நம்பினேன்
துன்பச் சிறையில் தள்ளப் போவது
தெரியாமல்!..

## தோல்வி

நான் நேசிப்பதை நீ
அறிந்திருக்க டியமில்லை
என் கவிதையைப்
போலவே என் காதலையும்
புரிந்து கொள்ள
மறுத்து விட்டாய்!....

## நினைவுகளில்

இதயத்தில் உறக்கம்
அற்ற ஒய்யாரமான
கனவில் கூட
தூக்கமின்றி உன் நினைவில்
என் கண்களின் ஓரத்தில்
தூக்கமின்றி உனதுருவம்
குடி கொள்கின்றது.
எப்போதும் என்றென்றைக்கும்
உன் நினைவுகளோடு மட்டும்
நான் வாழ்ந்து கொண்டிருப்பேன்!...

## இதயத்துடிப்பு

உனது துடிப்பை
அறிந்திருக்காத போதும்
இதயமே நீ ஏன் இன்னும்
அவனுக்காய் துடித்துக்
கொண்டிருக்கிறாய்,
உனது துடிப்பை இடை
நிறுத்தாத வரை துன்பச் சிறை
உனக்கு சொந்தமாகி
விடும்!.....

## நிழல்

நீ எனக்குச் சொந்தமில்லை
என்றாலும் உன் நிழல்கள்
எனக்குச் சொந்தம்
உன் பன்னால் திரும்பப் பார்
உன்னைத் தொடர்ந்து வரும்
நிஜங்களற்ற நிழல்களைப் போல

என் நினைவும் உன்னை
நிழல்களாய் தொடர்ந்து
கொண்டிருக்கும், நிழல்கள்
நிஜமற்றவை தான் ஆனால்
என் காதல் நிஜமானது
நீ நிழலாய் இருக்கும்
வரை!....

ச.சோபியா, முதலிக்கோயிலடி.

## கண்ணீர்

புலரும் பொழுதிலே,
மலரும் பூக்களின் முகத்திலே
படரும் பனித் துளிகள் தான்
கண்ணீரால்,
இலைகளையும் தழுவி
துடி துடிக்கின்றன.

ச.ரெஜிபாலா

## புதிய பாரதிக்கு வெற்றிக் கிண்ணம்

வலி. வடக்கு, ஜன 18

ஜனாதிபதி வெற்றிக் கிண்ணத்துக்கான கிளிநொச்சி மாவட்ட பெண்கள் கரப்பந்தாட்ட அணிகளுக்கு இடையே நடைபெற்ற போட்டியில் கிளிநொச்சி புதிய பாரதி விளை யாட்டுக்கழகம் சம்பியனாக தெரிவு செய்யப்பட்டது.

கிளிநொச்சி மாவட்ட இளைஞர் சேவைகள் மன்ற விளையாட்டு மைதானத்தில் நடைபெற்ற இறுதிப் போட்டி யில் பரந்தன் இளைஞர் வட்டம் விளையாட்டுக் கழகமும் பாரதி புரம் புதிய பாரதி விளையாட்டுக்கழகமும் மோதிக்கொண்டன.

மூன்று சுற்றுக்களைக் கொண்ட இந்தப் போட்டியில் முதல் இரண்டு சுற்றுக்களை புதிய பாரதி விளையாட்டுக் கழகம் 25:18, 25:14 என்ற புள்ளிகள் அடிப்படையில் வெற்றி பெற்று சம்பியனாக தெரிவு செய்யப்பட்டது.



அராலி மாவத்தை விளையாட்டுக் கழகத்தின் ஏற்பாட்டில் 2012 உழவர் விழா அராலி தெற்கு மாவத்தை விளையாட்டுக்கழக மைதானத்தில் இடம்பெற்றது. பிரதம விருந்தினராக யாழ்.மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர் ஈ.சரவணபவன் கலந்து கொண்டார்.

யாழ். மாவட்ட உதைபந்தாட்ட நடுவராக நியமனம் பெற்ற மாவத்தை விளையாட்டுக் கழகத் தலைவர் கனநாயகம் துஷ்யந்தனைப் பாராட்டி வாழ்த்துப் பத்திரம் வழங்கப்பட்டது. வாழ்நாள் பேராசிரியர் சி.க.சிற்றம்பலம் பாராட்டுப் பத்திரத்தை வழங்கினார்.

நாடாளுமன்ற உறுப்பினர் சரவணபவனுக்கு உதைபந்தாட்ட வீரர்கள் அறிமுகம் செய்து வைக்கப்படுகின்றனர்.

## சங்கானைச் சம்பியன் சரஸ்வதி ம.வி.

வலி வடக்கு, ஜன. 20

அராலி சரஸ்வதி மகா வித்தியாலயத்தின் நூற்றாண்டு விழாவையொட்டி சங்கானைக் கல்விக் கோட்டப் பாடசாலை அணிகளுக்கு இடையே நடத்திய 15 வயதுப் பிரிவினருக்கான வலைப் பந்தாட்டப் போட்டியில் அராலி சரஸ்வதி மகாவித்தியாலயம் நூற்றாண்டு விழா வெற்றிக் கிண்ணத்தைப் பெற்றுக்கொண்டது.

அராலி சரஸ்வதி மகா வித்தியாலய மைதானத்தில் இடம்பெற்ற இறுதிப் போட்டியில் சுழிபுரம் விக்ரோறியாக் கல்லூரியும் அராலி சரஸ்வதி மகா வித்தியாலயமும் மோதிக் கொண்டன.

போட்டி ஆரம்பமாகியதும் இரு அணிகளும் வேகமாக மோதிக் கொண்டன. எனினும் சுழிபுரம் விக் ரோறியாக் கல்லூரி சற்றுத் தளர்வுற்ற நிலையில் மைதானத்தில் அராலி சரஸ்வதி மகாவித்தியாலயத்தின் கை மேலோங்கியிருந்தது.

முதல் பாதி ஆட்டத்தில் அராலி சரஸ்வதி மகா வித் தியாலயம் 8: 3 என்ற புள்ளிகள் அடிப்படையில் முன்னனியில் நின்றது.

இரண்டாம் பாதி ஆட்டத்தில் இரு அணிகளும் புது வேகத்துடன் களமிறங்கி மோதிக்கொண்ட போதிலும் மீண்டும் பலப் பரீட்சையில் சரஸ்வதி வித்தியாலயத்தின் கை மேலோங்கியது.

இரண்டாம் பாதி ஆட்டம், சரஸ்வதி மகா வித்தியா லயம் 6:4 புள்ளிகள் என்ற அடிப்படையில் முன்னணியில் இருந்த வேளையில் ஆட்டம் முடிவடைந்தது.

ஆட்ட நிறைவில் அராலி சரஸ்வதி மகா வித்தியாலயம் 14:7 புள்ளிகள் என்ற அடிப்படையில் வெற்றிபெற்று சம்பியன் கிண்ணத்தை சுவீகரித்துக் கொண்டது.

## எமில் ரூபனுக்கு கௌரவம்

வலி. வடக்கு, ஜன 18

இளவாலை யங் ஹென் றீஸ் விளையாட்டுக்கழக வீரன் முடியப்பு எமில் ரூபன் யங்ஹென்றீஸ் விளை யாட்டுக் கழகத்தில் கடந்த 25 வருடங்களுக்கு மேலாக உதைபந்தாட்டப் போட் டிகளில் கலந்துகொண்டு விளையாடிவருவதை கௌரவிக்கும் வகையில் விளையாட்டுக் கழகத்தினால் பொற்கிளி வழங்கி கௌரவிக்கப் பட்டுள்ளார்.

இளவாலை புனிய ஹென் றியரசர் கல்லூரியின் நூற்றாண்டு விழாவையொட்டி யாழ். மாவட்ட உதைபந்தாட்ட அணிகளுக்கு இடையே நடைபெற்ற உதைபந்தாட் டப்போட்டியின் பரிசிளிப்பு நிகழ்வின்போது விளையாட் டுக்கழகத்தினால் பாராட்டி கௌரவிக்கப்பட்டார்.

இளவாலை புனித ஹென் றியரசர் கல்லூரி மைதானத்தில் ஞாயிற்றுக் கிழமை இடம்பெற்ற புனித ஹென் றியரசர் கல்லூரியின் நூற்றாண்டு விழாவையொட்டி இடம்பெற்ற உதைபந்தாட்ட இறுதிப் போட்டியைத் தொடர்ந்து இவரின் கௌர விப்பு இடம் பெற்றுள்ளது.

# உத்தியோகம் புருஷ லட்சணம் என்பதற்காய்....

செந்தூரி

"என்னைத் தட்டி விட்டாங்கள் அண்ணை!". ஏதோ வாழ்வின் உயர் எய்து கைக்கான இறுதிப் போட்டியில், கடைசிக் கணங்களில் போட்டியிலிருந்து விலக்கப்பட்டவனைப் போன்றதொரு விரக்தியில், மிக அண்மையில்தான் பதின்ம வயதுகளைக் கடந்த இளைஞனொருவனின் உதடுகள் பிதுக்கிய வார்த்தைகள் இவை!

உயர்தரப் பரீட்சையில் போதுமான சித்திகளைப் பெற்றுவிட்டு, அடுத்ததொரு சந்தர்ப்பத்தில் பல்கலைக்கழக வாய்ப்பினை பெறுவதற்கான ஊக்கமும், திறமையும், பெற்றோரின் உதவியும் கிடைக்கின்ற வாலிபர்கள் இவர்கள். கல்வியையும், கல்வித் தகுதிக்கான தொழில் வாய்ப்பையும் போதுமான படிமுறைகளினூடாகச் சென்று பெற்றுக் கொள்வதற்கான முயற்சிகளைப் புறந்தள்ளி விட்டு இப்படியான இயலாமையின் வார்த்தை வெளிப்பாடுகளைக் கொட்டும் இவர்கள் தோல்வியுற்றது எந்தத் தெரிவில்?

சர்வதேசங்களின் நாடக மேடையில் ''பவூன்''களுக்கு ஒப்பான கோமாளித்தனமான மரியாதையைப் பெற்றுள்ள, ''தனி மனித ஒழுக்கங்களையும்'', ''போரியல் விழுமியங்களையும்'', ''மனிதாபிமான கடப்பாடுகளையும்'' விஷப்பற்களால் கொறித்து ஏப்பம் விட்ட இலங்கையின் பாதுகாப்புப் படையின் ஓர் அங்கமான காவல்துறை பட்டாளத்தில் இணையக் கிடைத்த தெரிவில் ஏற்பட்ட தோல்வியை.....

இந்தத் தீவின் முப்படையினருக்கு மேலதிகமாக, நீதி பரிபாலனத்துக்கான சாட்டைக்காரர்களாக அடையாளப்படுத்தப்படும் ''பொலிஸ்'' துறைக்கான ஆட் சேர்ப்புதான் வடக்கு, கிழக்குப் பகுதி களைச் சேர்ந்த தமிழ் இளைஞர்களிடம் இப்போதைக்கு முளைவிட்டுள்ள ''மவுசு'' கூடிய மிடுக்கின் குறியீடு.

அசாதாரணமான இந்த வேலைவாய்ப்புப் பாதையில் இருக்கும் அபாயகரமான பள்ளங்களையும், அரசியல் போலித்தனம் நிறைந்த கொண்டையூசி வளைவுகளையும், இனவாதம் சொட்டி நிற்கும் கபடக் காட்டாறுகளையும் எம் எல்லோர் கண்களிலிருந்தும் மறைத்து விடுகின்றது ''அரச பதவி'' என்ற கானல் நீர்!

''நிரந்தரமானதும், ஓய்வூதிய உரித்துடையதும் ஆன பதவியில் அமர்த்தப்படுகிறீர்கள்'' எனும் வாசகங்கள் தட்டச்சுச் செய்யப்பட்ட நியமனக் கடிதங்கள் கிடைக்குமென்பதற்காய் தமிழன் எதையும் விலை கொடுக்கத் தயார் என்கின்ற இழிநிலை மட்டுமே இப்போதைக்கு எமது சொத்து.

''எமது இளைஞர்களுக்குக் கிடைக்கின்ற அரிய அரச வாய்ப்புக்களை, மழுங்கடிக்கச் செய்யும் சக்திகளின் கூப்பாடு'' என மேற்படி கருத்துக்கள் பொதிந்த எல்லாத் தமிழுணர்வுக் குரல்களையும் எதிர்க்கும், அரச ஏற்பாட்டாளர்கள் (தென்னிந்திய தமிழ் வழக்கில், டபுள் ''எம்.ஏ''க்கள்) நியமனத்துக்குப் பின்னான அதே ''எம் இளைஞர்களின்'' அவலத்தைக் கண்டு கொள்வதே இல்லை, ஏன்?

> "ஒரு மாத வேலையின் பின்னர் கிடைக்கும் எட்டு நாள்கள் விடுப்பினைக் கோரி உயரதி காரியின் அலுவலகம் நாடி நிற்கும்போது ''வீட்டில் போய் என்ன.....?'' என்று எழுத்தில் இயற்ற முடியாத வார்த்தைகளால் தூஷணாபிசேகம் பெற்ற பெண் பிள்ளைகள், உத்தியோ கத்துக்காக சகலதையும் சகிக்கும் கற்சிலைகளாகிப் போனார்கள்.

''சிறு வயதில் பிள்ளைகளின் கையில் பணம் புழங்குவது, அதீத சிக்கல்களுக்கு வழிவகுக்கும்'' எனும் நம்பிக்கையுடன் பின்னிய உண்மையை, ஏறத்தாழ கலாசாரமாகவே பின்பற்றுபவர்கள் வடபகுதித் தமிழர்கள். நடுத்தர, உயர், அதியுயர் குடும்பங்களிலும்கூட தேவைக்கதிகமான பணப் பெறுமதியை பால்ய வயதினரிடம் கொடுத்து வைப்பதில் எப்போதும் தயக்கம் காட்டி வருவதே எம் மண்ணின் எழுதாக் கட்டளை. இந்த ஒழுங்குகளின் கிரமத்தில் சென்று தமது உயர் கல்வியை முடித்த பின் தொழில் ஒன்றில் அமர்த்தப்படும்போது சுமார் இருபத்தைந்துக்கு மேற்பட்ட வயதினிலேயே முதலாவது சம்பாத்தியத்தை பணமாக, கைகளில் பெறமுடியும்.

தெளிந்த வயதொன்றிலேயே முதன் முதலாக கையில் காசைப் பார்ப்பவர்கள், அதனை எப்போதும் தவறாகச் செலவிடத் துணியமாட்டார்கள் என்ற காலகாலமான நம்பிக்கையின் அச்சாணி இன்றைக்கு முற்றிலுமாக தகர்க்கப்பட்டதன் விளைவுகளைக் கண்கூடாகக் காணமுடிகிறது.

வெறும் இருபதின் முற்பகுதியில் உயர் கல்வியைப் பாதியில் நிறுத்திவிட்டு, அல்லது பட்டக் கல்வியை மறுதுவிட்டு தொழில் முனையும் எம்மிளைஞர்களின் எல்லா விரல்களிலும் பணத்தேவை பூத்துக் கிடக்கின்றது! பட்டப் படிப்புக்கு பின்னரும் வெட்டியாகவே இருக்கும் தம்மூத்தோரைச் சுட்டிக் காட்டி, தமது ''உடனடி வேலைப்பிரயாசை''க்கு போதுமான ஆதரவையும் திரட்டமுடிகின்றது அவர்களால்.

புத்தகக் கடைகளின் முகப்பில், விளம்பரமிட்டு விற்கப்பட்ட, படிவங்களை ''பொலிஸ் தலைமையகத்துக்கு'' நிரப்பி விட்டு, சீருடைக் கனவில் மிதந்த எம்மினிய இளவல்களே! காலவோட்டத்தின் மாறுதலுக்கு ஏற்ப, தமிழ் இளைஞர்களும் பட்டாளத்தில் இணைவது தவிர்க்க முடியாததென்று ''சுடலை ஞானம்'' பேசும் வழிகாட்டிகளே! கீழ்வரும் இரு வகையிலான ஆளும் இனத்தின் சுரண்டலுக்கும், அடிமைகொள்ளலுக்கும் அகண்ட இனவாதத்துக்கும் உங்கள் பதில்தான் என்ன?

இலங்கையின் முப்படையினரான தரை, கடல், விமானப் படையில் கூட ஆயுதப் பயிற்சி பெறும் ஆட்சேர்ப்புத் திட்டத்தில், தமிழ் இளைஞர்களை உள்வாங்குவது பற்றி இன்னமும் கனவில்கூட யோசனை செய்ததாகஇல்லை. தமிழர்கள் எல்லோரும் விடுதலைப் புலிகள்தான், முன்னாள் புரட்சியாளர்கள்தான் என்கின்ற அடிப்படைச் சித்தாந்தத்தை மீறமுடியாமல், தமிழ் இளைஞர்களை ஆயுத முப்படைகளில் இணைப்பதன் மூலம் இராணுவ இரகசியங்களை (அப்படி எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.) வெளிக்கொணர்ந்து, எதிர்காலத்து ஈழப்போரை ஆரம்பித்து விடக்கூடாது என்பதில் உறுதியாய் இருப்பது தெரிகின்றது.

கடும் பயிற்சிகளும், தேசத்தின் கௌரவமும் நிறையவே கொடுக்கப்படும் முப்படையினரின் எண்ணிக்கையினுள், தமிழ் பேசும் பிள்ளைகளை நுழைய விடக்கூடாது எனும் நிபந்தனையுடன், தமது தனித்தன்மையை பேணிக் கொண்டும், சர்வதேசங்களிடம் தமிழனை சம தராசில் வைத்து தூக்கிப் பிடிக்கின்றோம் என்று நிழல் விழுத்துவதற்காய், உப்புச் சப்பற்ற பயிற்சிகளோடு காக்கி உடை கொடுத்து வீதியில் இறக்கிவிடும் சாதுரியத்துக்கு நிகர் ஏது?

இதைத் தவிர, காவல்துறையினரின் உள்ளார்ந்த வீரியங்களில் எம்இளைஞர்கள் பெற்ற மரியாதைகள் சொல்லில் அடங்காதவை! இராணுவ பயிற்சிகள் கடுமையானவை என்பது யாவரும் அறியினும், பயிற்சிக் காலத்தின் அரை வருடத்தையோ, ஒரு வருடத்தையோ முகம் தெரியாத தெற்கு ஊர் ஒன்றில் வைத்து வாட்டி வதைப்பதும், குடும்பத்தினருடன் தொலைத் தொடர்புகளைக் கூடப் பேண முடியாமல் தடுப்பதும் இன்னொரு வகை.

மேலும் தெரிவு செய்யப்படும் தமிழ் இளைஞர்கள் தனிக் குழுக்களாகவே பயிற்சி பெற்று, படுத்துறங்க வேண்டும். தவறிக்கூட சேர்ந்தியங்கும் சிங்கள இளைஞர்களை சந்தித்துவிடக்கூடாதென்பதில் பெரும் கட்டுப்பாடுகளோடு இயங்கியதும் உண்மை. எல்லா வகையான அப்பியாசங்களிலும் மற்ற எல்லாக் குழுக்களிலிருந்தும், வேறுபட்ட கடுமையான முறைகளைக் கொண்டு பயிற்றப்பட்ட தமிழ் இளைஞர்கள் ஆயுதம் எடுத்து சூட்டாற்றலை பெற்றுக்கொள்வதில், போதிய திறமையைப் பெற்றுக்கொள்ளக் கூடாது எனும் நிலைப்பாட்டையும் பேணியே பயிற்சிகள் முடிவுறுத்தப்பட்டன. வெளியேறிய குழுக்களில் உள்ள சில இன்றைய எம்மூர் இளைஞர்கள், சீருடை அணிந்துள்ள போதிலும், ஆயுதங்களைத் தொட்டுக்கூடப் பார்த்ததில்லை என்பது அதிர்ச்சியுடனான ஆச்சரியம்.

''பணியிடத்தில் மேலதிகாரிகளின் பாரபட்சம்'', ''தமது சகபாடிகளிலிருந்து எப்போதும் தனிமைப்படுத்தி வைத்திருத்தல்'', ''முப்பது நாள்கள் வேலையின் பின்னான தொடர்ந்து எட்டு நாள்கள் லீவினைக் கேட்டாலும், இழுத்தடித்தல்'' என அக்கிரமங்கள் நிலையத்தினுள்ளும் தொடர்கின்றன.

கடமை ஒழுங்குகளின்படி தொடர்ச்சியான ஒரு மாத வேலையின் பின்னர் கிடைக்கும் எட்டு நாள்கள் விடுப்பினைக் கோரி உயரதிகாரியின் அலுவலகம் நாடி நிற்கும் போது ''வீட்டில் போய் என்ன.....?'' என்று எழுத்தில் இயற்ற முடியாத வார்த்தைகளால் தூஷணாபிசேகம் பெற்ற பெண் பிள்ளைகள், உத்தியோகத்துக்காக சகலதையும் சகிக்கும் கற்சிலைகளாகிப் போனார்கள். இப்படியான வெளியே தெரிந்த சிலவும், வெளித் தெரியாத பலவுமாக, ''கெட்ட குடியும், பட்ட காலும்'' எப்போதும் எமக்கானதே!

மேற்போந்த நடைமுறைச் சிக்கல்கள் எல்லாவற்றிற்கும் மேலாக, தமிழுணர்வை எம் குருதியின் ஓர் அங்கமாக சுமக்கும் இனக் கூட்டமொன்றின் தனியன்களான எம்மிளவல்கள் தூக்கும் ஆயுதங்கள்தான் , முந்தை நாள் எம் சித்தப்பனையும், மாமனையும் சின்னாபின்னமாக்கின. எம் குலப் பெண்களின் கற்பு களவாடப்பட்ட போதில் காவலுக்கிருந்தன. எழுபதுகளில் அரச ஆயுதப் படைகளில் உயரதிகாரிகளாக இருந்தவர்கள், ஈழவிடுதலைப் போராட்டத்திலும், தமிழ்த் தேசிய அரசியல் நீரோட்டத்திலும் இணைந்து, எமது மூன்று தசாப்த கனவுகளைச் சேர்ந்து சுமந்தவர்கள் எனும் வரலாற்றையும் அடிக்கடி மறந்து போகின்றோம்.

அந்தக் காலங்களைக் கடந்து வந்த பின்பும்கூட, அரச ஆயுதப்படை அங்கத்தவர்களாக இருந்த எல்லாத் தமிழர்களையும் ஆளும் இயந்திரம் ''தேசத் துரோகிகளாகவே'' கழுகுப் பார்வை பார்த்ததும் நினைவிருக்கிறது.

இன்றைக்கு, எம்மினத்தையும் தூயதாகப் பேணவிடாமல் இனக்கலப்பு செய்து, ''ஒரே தேசம் ஒரே மக்கள்'' என்ற கோஷத்தினோடு அணிவகுப்பிற்கென அழைத்துப் போய், அரங்கில் கூட அமர இடம் கொடாத, கீழ்த்தரமான இனவாதங்களுக்குள் அகப்படாமல் தப்பித்து வெளி நிற்போரே, இந்த தெரிவுகளால், ''தட்டி விடப்பட்டோர்''! ''உத்தியோகம் புருஷலட்சணம் என்பதற்காய் புத்தியிழக்கான் தமிழன்'' என்று உரத்துச் சொல், உலகின் காதுகளில்.... ★

# நெப்போலியன் படை முன்னேறியது




14

அடுத்த கட்டமாக, சில சிறு பகுதிகளைக் கைப்பற்றும் முயற்சியில் இறங்கினார் நெப்போலியன். ஆஸ்திரியப் படைகளை நேரடியாக எதிர்க்காமல், அவர்கள் அசந்து மறந்த சில இடங்கள் பிரெஞ்சுப் படையின் கட்டுப்பாட்டில் வந்தன.

இந்தச் சின்னச் சின்ன வெற்றிகளைக்கூட, மிகப் பெரிய சாதனைகளாக முன்னிறுத்திப் பேசினார் நெப்போலியன். 'இந்தப்பகுதிகளை ஜெயித்த நம்மால், மொத்த ஆக்கிரமிப்பையும் எதிர்த்து விரட்டமுடியும்' என்று சொல்லி நம்பிக்கை கொடுத்தார்.

பிரெஞ்சுப் போர் வீரர்கள் காத்திருந்தது இந்த 'வெற்றி' உணர்வுக்காகத்தான். அந்த ருசி கண்டுவிட்டபிறகு, அவர்களுடைய வேகம் பலமடங்காக அதிகரித்தது. பிரான்ஸ் படைகளுக்குத் தொடர் வெற்றிகள் கிடைக்கத் தொடங்கின.

இந்த வெற்றிகள் ஒவ்வொன்றைப்பற்றியும், பாரிஸுக்குக் கடிதங்கள் எழுதினார் நெப்போலியன்,

'நம்முடைய வீரர்கள் இத்தனைச் சாதித்திருக்கிறார்கள், பதிலுக்கு, நீங்கள் என்ன தரப்போகிறீர்கள்?' என்று அவருடைய கடிதங்கள் மறைமுகமாகக் கேள்வி கேட்டன.

கொஞ்சம்கொஞ்சமாக, தன்னுடைய படை வீரர்களுக்குத் தேவையான எல்லா அடிப்படை வசதிகளையும், கூடுதல் பரிசுகள், கௌரவங்களையும் பெற்றுத் தந்தார். இதன்மூலம், அவர்கள் ஊக்கத்துடன் தொடர்ந்து போரிட்டார்கள்.

இந்தக் காலகட்டத்தில் நெப்போலியன் தனது மேலிடத்துக்கு எழுதிய கடிதங்கள் மிகச் சுவாரஸ்யமானவை. அவற்றில், 'இந்த ஆக்கிரமிப்பை எதிர்ப்பது என்னுடைய பொறுப்பு' என்கிற கம்பீரம் தெளிவாக வெளிப்படுகிறது. அதேசமயம், 'நான் உங்களுக்குப் பணிந்தவன்' என்பது போன்ற ஒரு பிரமையும் இருக்கிறது.

ஆஸ்திரியாவுக்கு எதிரான சண்டைகள் சூடு பிடித்துக்கொண்டிருந்தபோது, பிரான்ஸ் இராணுவத்தில் பணிபுரிந்துகொண்டிருந்த தன்னுடைய நம்பிக்கைக்குரிய நண்பர்கள் சிலரை இத்தாலிக்கு வரவழைத்தார் நெப்போலியன். பல முக்கியப் பொறுப்புகள் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டன.

இதன்மூலம், மொத்தப் படைப் பிரிவையும் நெப்போலியன் பாணியில் இயங்கச் செய்ய முடிந்தது. அவருடைய ஆரம்பக் காலத் திட்டங்கள் சிலவற்றை, இப்போதுதான் நிறைவேற்றுகிற வாய்ப்பு கிடைத்தது.

அதுவரை இத்தாலிக்குச் சென்ற பிரெஞ்சுத் தளபதிகள் பலர், போனேன், வந்தேன் என்று அடுத்த குதிரையைப் பிடித்துத் திரும்பி வந்து கொண்டிருந்தது தான் வழக்கம். இந்தச் சூழலில், நெப்போலியன் தலை மையிலான படை, பல குறிப்பிடத்தக்க வெற்றிகளைப் பெறத் தொடங்கியது. கொஞ்சம் கொஞ்சமாக இத்தாலியில் ஆஸ்திரியாவின் ஆக்கிரமிப்பு அகற்றப்பட்டுக் கொண்டிருந்தது.

நெப்போலியன் வாழ்நாள்முழுவதும் பின்பற்றுவதற்கான போர்த் தந்திரங்களை இந்த நாள்களில்தான் சுயமாகக் கற்றுக் கொண்டார். போர்க் களங்களில் அது வரை யாரும் நினைத்துக் கூடப் பார்த்திருக்காத விஷயங்களையெல்லாம் அநாயாசமாக முயன்று பார்த்து வெற்றியடைந்தார் நெப்போலியன்.

இதனால், ஆரம்பத்தில் அவரைச் சாதாரணமாக நினைத்துக் கொண்டிருந்த படைவீரர்கள்கூட, பின்பு நெப்போலியன், 'என்ன சொன்னாலும் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்ற வேண்டும்' என்கிற அளவுக்கு விசுவாசத்துடன் செயற்படத் தொடங்கினார்கள்.

ஆஸ்திரியாவின் ஆக்கிரமிப்பிலிருந்து தற்காத்துக் கொள்ளத் தொடங்கிய போர்,நெப்போலியனின் உறுதியால்தான், ஜெயித்தாக வேண்டிய போராக நிறம் மாறியது.

'இதுதான் திட்டம். என்ன நடந்தாலும் இதைத் தான் செய்ய வேண்டும்' என்று நெப்போலியன் எப்போதும் உறுதியாகத் தீர்மானித்துக் கொண்ட தில்லை. ஒரு தெளிவான திட்டத்தோடு

மக்களாட்சி நடைபெறும் பிரான்ஸ் அரசாங்கம், யாரையும் அடிமைப்படுத்த விரும்பவில்லை. ஆகவே, இத்தாலி மக்களே, உங்களுக்கெல்லாம் முழுச்சுதந்திரம். பிரான்ஸை எதிர்க்கமாட்டோம் என்று ஒரு வார்த்தை உறுதிமொழி கொடுங்கள், அமைதி ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போட்டுவிடுங்கள், அதன் பிறகு, உங்களை நீங்களே ஆட்சி செய்து கொள்ளுங்கள்!' என்று சொல்லி விட்டு, நெப்போலியன் தன் படையினரோடு அடுத்த பகுதியைக் கைப்பற்றக் கிளம்பினார்.

வேலையைத் தொடங்குவோம், ஒருவேளை அது எதிர்பார்த்தபடி வெற்றியடையாவிட்டால், அப்போதைய நிலைமையை யோசித்து, இன்னொரு திட்டத்தை உருவாக்கிக் கொள்ளவேண்யது. எப்படியோ, தொடர்ந்து முன்னேறிக் கொண்டே இருப்பதுதான் முக்கியம்.

போர் செய்வது என்று ஓர் இடத்துக்குக் கிளம்பி வந்துவிட்டால், அந்தப் பகுதியின் புவியியல் மொத்த மும் அவருடைய மனத்தினுள் வரைபடமாகப் பதிந்து விடும். ஒரு தெரு, ஒரு மலை, ஒரு பள்ளத்தாக்கு, ஒரு நதி, ஒரு குட்டையைக்கூட விட்டுவைக்காமல் கச்சித மாகப் புரிந்துகொள்வதுதான நெப்போலியனின் முதலாவது தாக்குதல் நடவடிக்கை.

இப்படித் தனக்குள் போர்க்களத்தின் வரைபடத் தைப் பதிய வைத்துக் கொண்டபிறகு, எதிரிப் படைகள் எங்கே முகாம் போட்டிருகின்றன என்பதைக் கவனிப்பார் நெப்போலியன்.

நாளைக் காலை தூங்கி எழுந்து பல் தேய்த்துச் சாமி கும்பிட்டதும், அவர்கள் எந்த திசையிலிருந்து நம்மைத் தாக்க வருவார்கள் என்று யோசிப்பார்.

எதிராளி என்ன செய்யப்போகிறான் என்பதை நெப்போலியன் சரியாக ஊகித்துவிட்டாலே, போரில் பாதியை ஜெயித்துவிட்டதாக அர்த்தம். அதன்பிறகு, அவர்கள் எதிர்பாராத நேரத்தில், எதிர்பாதார விதத்தில் அவர்களைத் தாக்குவதற்கான திட்டத்தை மளமள வென்று கற்பனையிலேயே உருவாக்கிவிடுவார்.

நெப்போலியனின் இன்னொரு மிகப் பெரிய பலம், அவருடைய அலைவரிசையில் சிந்திக்கும் நண் பர்கள், துணைத் தலைவர்கள். அவரது திட்டங்களைக் கச்சிதமாக நிறைவேற்றி வெற்றியடையச் செய்வதில் இவர்களுக்கு மிக முக்கியமான பங்கு இருந்தது.

இத்தாலியில் நெப்போலியனின் படை, பல முக்கியமான பகுதிகளைக் கைப்பற்றிக் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறத் தொடங்கியது. இதனால், ஆஸ்திரியப் படைகள் பின்னே நகர்ந்து, தங்களுடைய நாட்டுப் பகுதியினுள் ஒடுங்கவேண்டியதாயிற்று.

இப்படி ஆஸ்திரியாவிடமிருந்து பிரெஞ்சுப் படைகள் கைப்பற்றிய இத்தாலியப் பகுதிகள் அனைத்தும், பிரான்ஸ் நாட்டுக்குத்தான் சொந்தமாகிறது. ஆனால் இந்தப் பொதுவான விதிமுறையை நெப்போலியன் பின்பற்றவில்லை.

'மக்களாட்சி நடைபெறும் பிரான்ஸ் அரசாங்கம், யாரையும் அடிமைப்படுத்த விரும்பவில்லை. ஆகவே, இத்தாலி மக்களே, உங்களுக்கெல்லாம் முழுச் சுதந்தரம். பிரான்ஸை எதிர்க்க மாட்டோம் என்று ஒரு வார்த்தை உறுதிமொழி கொடுங்கள், அமைதி ஒப்பந் தத்தில் கையெழுத்துப் போட்டுவிடுங்கள், அதன் பிறகு, உங்களை நீங்களே ஆட்சி செய்து கொள்ளுங்கள்!' என்று சொல்லிவிட்டு, நெப்போலியன் தன் படை யினரோடு அடுத்தப் பகுதியைக் கைப்பற்றக் கிளம்பினார்.

ஆனால், இப்படி ஊருக்கெல்லாம் உதவி செய்து கொண்டிருந்தால், பிரான்ஸின் நிலைமை என்ன ஆவது? இத்தனை காச செலவழித்துப் போர் நடத்துகிறார்கள், அவர்களையும் கொஞ்சம் திருப்திப் படுத்தவேண்டாமா?

அதற்கும் நெப்போலியன் ஒரு வழி வைத்திருந்தார். தான் ஜெயிக்கிற ஒவ்வொரு பகுதியிலிரந்தும், குறிப்பிட்ட ஒரு தொகையை, அல்லது செல்வங் களைப் பெற்று பாரிஸுக்கு அனுப்பி வைத்துக் கொண்டிருந்தார்.

மற்ற படைத் தளபதிகளெல்லாம், 'காசு கொடு, காசு கொடு' என்று இராணுவத்தை, ஆட்சியாளர்களை நச்சரித்துக்கொண்டிருந்தார்கள். ஆனால், நெப்போலியன்மட்டும் கொஞ்சம் வித்தியாசமாகப் பாரிஸுக்குப் படியளந்துகொண்டிருந்தார்.

அப்போதைய பிரெஞ்சு அரசாங்கத்திடம், புரட்சி ஆட்சி என்கிற பெருமைதான் இருந்தது, பணம்

இல்லை. ஆகவே, நெப்போலியன் அனுப்பிவைக் கிற செல்வங்களைப் பார்க்கப் பார்க்க, அப்போதைய ஆட்சியாளர்களுடைய கண்கள் விரிந்தன, 'அண்ணல் நெப்போலியன் வாழ்க' என்று கோஷம் போடாத குறையாக அள்ளிக் கொண்டார்கள்.

இதனால், மேலிடத்தில் நெப்போலியனுக்கு நல்ல பெயர். தன்னுடைய படை வீரர்களுக்காக அவர் கேட்கிற வசதிகளெல்லாம் உடனடியாகக் கிடைத்தன.

இத்தாலிய ஆக்கிரமிப்பின்போது, நெப்போலியனுக்குக் கிடைத்த தொடர் வெற்றிகள், மனதளவில் அவரிடம் ஒரு பெரிய மாற்றத்தை உருவாக்கியிருந்தன. தன்னைப்பற்றி அவர் கொண்டிருந்த சில சுயமதிப்பீடுகள், உறுதி பெறத் தொடங்கின. உள்ளுக்குள் தன்னம்பிக்கை பொங்கியது. கண்ணுக்கு எதிரே தன்னுடைய திட்டங்கள், புதுப்புது உத்திகள் நன்கு செயல்பட்டும் பலனளிப்பதைப் பார்க்கும் போது, அவருக்கு உற்சாகம் தாங்கவில்லை.

போதாக்குறைக்கு, இத்தாலிய மக்களும் நெப்போலியனைத் தங்களுடைய மானசிகத் தலைவராகவே எண்ணி வரவேற்கத் தொடங்கியிருந்தார்கள். அவருடைய ஒவ்வொரு வெற்றியையும் உள்ளூர் மக்கள் தங்களின் வெற்றியாகவே கொண்டாடி மகிழ்ந்தார்கள்.

அதன்பிறகு, நெப்போலியனின் நடவடிக்கைகளில் பெரிய மாற்றங்கள் தெரியத் தொடங்கின. எதைப் பற்றிச் சிந்தித்தாலும், வெறும் இராணுவக் கண்ணோட் டத்துடன் நின்றுவிடாமல், அரசியல், சமூகப்பார்வை யோடு யோசிக்க ஆரம்பித்தார். வழக்கமாக கம்பீரத்துடன், நிஜமான தலைவரைப்போலவே நடந்து கொண்டார்.

அப்போது, நெப்போலியனை நேரில் பார்த்தவர்கள் எல்லோருக்கும், இவர் படைத் தளபதியா, அல்லது பேரரசரா என்கிற சந்தேகம் வந்தது. சுற்றியிருக்கிற வர்கள் அவரைப் பார்க்கிற விதமும் மாறியது. நெப்போலியனே அரசியல் முடிவுகள் எடுப்பதும் அமைதி ஒப்பந்தங்களில் கையெழுத்திடுவதும் மக்கள் அவருடைய வெற்றிகளைக் கொண்டாடுவதும் பாரிஸில் இருந்த பெரிய அரசியல் புள்ளிகளுக்குப் பிடிக்கவில்லை.

ஆகவே, அவர்கள் நெப்போலியனின் வாலைக் கொஞ்சம் நறுக்கிவைக்கத் தீர்மானித்தார்கள். அதற்கான ரகசியத் திட்டங்கள் தீட்டப்பட்டன.

தொடரும்.......

# இறுதி நாள்கள்

றிசிக்கேசன்

> ‘மூன்று நாட்களுக்கு ஒரு தடவை அல்லது நான்கு நாள்களுக்கு ஒரு தடவை, சில சந்தர்ப்பங்களில் ஒரு வாரத்திற்கு ஒரு தடவையென ஒருதொகுதி உணவுப் பொருட்களும், மருந்துப்பொருட்களும், கப்பல் மூலம் அனுப்பி வைக்கப்படுவதும் கப்பல் திரும்பிச் செல்லும் போது மேலதிக சிகிச்சைக்கு உட்படுத்தவேண்டிய ஒரு தொகுதி நோயாளர்களையும் ஏற்றிச் செல்வதுமான பணி கட்டம் கட்டமாகத் தொடர்ந்தது’

மாசி மாதத்தின் பனிப்படலத்தை விலக்கி கதிரவன் தனது நாளாந்தக் கடமையைத் தொடங்கியிருந்தான். நேரம் பகல் பத்து மணியளவில்தான் இருக்கும். வெயிலின் வெப்பம் அதிகமாக இருந்தது. வீதியின் கரையோரங்களை உழவு இயந்திரங்களும், பாரவூர்திகளும், பேரூந்துகளும், ஏனைய வாகனங்களும் நிறைந்திருந்தன. வெட்டை வெளிகளாக இருந்த இடங்களிலெல்லாம் தரப்பாள் கூடாரங்கள் முளைத்திருந்தன.

புதுக்குடியிருப்பு, இரணைப்பாலை, தேவிபுரம், கோம்பாவில் ஆகிய பகுதிகள் எறிகணைத்தாக்குதல்களால் அதிர்ந்த வண்ணமிருந்தன. போதாக் குறைக்கு துப்பாக்கி ரவைகளும் கூவிக் கொண்டு வந்தன. மாத்தளனிலிருந்து புதுக்குடியிருப்புக்குச் செல்லும் வீதி மக்களாலும் வாகனங்களாலும் நிறைந்திருந்தன. பொருள்களை ஏற்றிய உழவு இயந்திரங் களுக்குப்பின்னால் உந்துருளிகளிலும், துவிச்சக்கர வண்டிகளிலும் கரியல்களில் தங்களது அத்தியாவசியப் பொருட்கள் அடங்கிய பொதிகளைச் சுமந்தவாறும் சிலர் தங்கள் தலையிலும், தோளிலும் சுமந்தவாறும் மாத்தளனை நோக்கி அலை அலையாகச் சென்று கொண்டிருந்தார்கள்.

வந்தவெள்ளம் இருந்த வெள்ளத்தையும் அள்ளிச் சென்றது என்ற பழமொழி வன்னியில் இடப்பெயர்வுகளைச் சந்தித்த மக்கள் அனைவருக்கும் சாலப் பொருந்தும். மன்னாரிலிருந்து மாத்தளன் வரைக்கும் ஒவ்வொரு இடமாக இடம்பெயருகின்ற போது அந்த இடத்து மக்களும் சேர்ந்தே இடம் பெயரவேண்டிய நிலை ஏற்பட்டது. மாத்தளனை நோக்கி வந்து கொண்டிருந்த மக்கள் தொடரான இடப்பெயர்வுகளினால் ஏற்பட்ட உடல் உளைச்சல் , பசியால் ஏற்பட்ட களைப்பு, தமது உறவுகளை சுதந்திரபுரத்திலும், தேவிபுரத்திலும் இழந்த துயரம் எல் லாமே அவர்களின் முகங்களில் தெரிந் தன.

இரணைப்பாலை சந்தியிலிருந்து மாத் தளன் சந்தி வரையான சுமார் இரண்டு மைல் தூரத்தை இரண்டு மணித்தியாலங்கள் சென்றாலும் கடக்க முடியாத நிலை ஏற்பட்டது. உழவு இயந்திரங்கள் ஒன்றையொன்று விலத்த முடியாமல் போக்குவரத்து தடைப்படுவதும் பின்னர் சிறிது தூரம் நகர்வதும் பின்னர் தடைப்படுவதும் பின்னர் நகர்வதுமாகவே மாத்தளன் நோக்கிய இடப்பெயர்வு அமைந்திருந்தது. மாத்தளன் சந்தியில் சிறிய தகரக்கொட்டகை ஒன்று அமைந்திருந்தது. அந்தக் கொட்டிலில் இரண்டு பெண்போராளிகள் பெரிய பாத்திரம் ஒன்றில் கஞ்சி வைத்திருந்து பசியாலும் தாகத்தாலும் களைத்துப்போய் வந்து கொண்டிருந்த மக்களுக்கு அதனை வழங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.

மாத்தளன், அம்பலவன், பொக்கணை, வலைஞர்மடம் ஆகிய இடங்களிலுள்ள தனியார் காணிகள் மற்றும் அரச காணிகள் எங்கும் தரப்பாள் கூடாரங்களும், ஓலைக்குடிசைகளுமே காணப்பட்டன. தரப்பாள் கூடாரம் அமைப்பதற்கு இட வசதி இல்லாதவர்கள் மாத்தளன், பொக்கணை நீரேரியன் வெளிப்பகுதியில் நீர் வற்றிய களிமண் கட்டாந்தரையிலும் சதுப்புநிலங்களிலும் கூடாரங்கள் அமைத்து, நிலத்திற்கு தரப்பாள் விரித்து நூற்றுக்கணக்கான குடும்பங்கள் குடியிருந்தன. அந்த உப்பு நீரேரியின் வெளிப் பகுதி வசிப்பதற்கு எந்த வகையிலும் ஏற்புடையது அல்ல.



மாத்தளன், பொக்கணை, வலைஞர் மடம் ஆகிய பகுதிகளின் பாடசாலைகள் வைத்தியசாலைகளாகச் செயற்பட்டுக்கொண்டிருந்தன. நாளாந்தம் எறிகணைத்தாக்குதல்களா லும் துப்பாக்கி ரவைகளாலும் காயமடைகின்ற போராளிகளும், பொதுமக்களும் கொண்டு வரப்பட்டு சிகிச்சைகள் மேற் கொள்ளப்பட்டன. அரச வைத்திய அதிகாரிகளுடன் விடுதலைப்புலிகளின் மருத்துவர்களும் இணைந்து இரவு பகல் பாராது உயிர் காப்புப்பணியில் அர்ப்பணிப்புடன் செயற்பட்டுக் கொண்டிருந்தார்கள். விடுதிகள் எல்லாம் காயமடைந்த போராளிகளாலும் பொதுமக்களாலும் நிரம்பியிருந்ததால் மர நிழல்களிலும் தரப்பாள் விரித்து காயப்பட்டவர்களுக்கு சிகிச்சைகள் மேற்கொள்ளப்பட்டுக் கொண்டிருந்தன. வைத்தியசாலைகளில் மேலதிக சிகிச்சை வசதிகள் இல்லாததால் காயமடைந்தவர்கள் நாளாந்தம் மரணித்துக்கொண்டிருந்தார்கள், மரணப்பவர்களின் உறவினர்களின் அழுகையொலிகள் ஒரு புறமும் காயமடைந்தவர்களின் வேதனையொலிகள் மறுபுறமும் ஏனைய காயமடைந்தவர்கள் மற்றும் அவர்களின் உறவினர்களின் பேச்சொலிகள் எல்லாம் சோர்ந்து வைத்தியசாலையின் அமைதியை குழப்பியது.

மக்கள் தாங்கள் கைவசம் வைத்திருந்த உணவுப் பொருள்களெல்லாம் தீர்ந்த நிலையில் ஒரு நேரச் சாப்பாட்டுக்கே பெரும்பாடுபட்டனர். வைத்தியசாலைகளில் மருந்துக்களஞ்சியங்களில் இருந்த மருந்துகளும் தீர்ந்த நிலையில் எறிகணைத் தாக்குதல்களாலும் துப்பாக்கி ரவைகளாலும் நாளாந்தம் நூற்றுக்கணக்கான மக்கள் கொல்லப்பட்டதோடு காயமடைந்து வைத்தியசாலைகளுக்கு கொண்டு வரப்படுகின்றவர்களும் போதிய மருந்துகள் இன்மையாலும் மருத்துவவசதிகள் இன்மையாலும் மரணிக்கின்ற விகிதம் அதிகரித்துக் கொண்டிருந்தது. கடை உரிமையாளர் தாங்கள் கைவசம் வைத்திருந்த பொருள்களுக்கு அதிகூடிய விலையை நிர்ணயித்து விற்பனை செய்தார்கள். அத்தியாவசிய உணவுப்பொருட்களான அரிசி, மாவு, சீனி என்பன கிலோ இரண்டாயிரம் ரூபாவிற்கும் விற்றார்கள். சிறிய தேங்காய் வாங்குவது அரிது. மைசூர் பருப்பையும், கடலைப்பருப்பையும் தவிர வேறு மரக்கறி வகைகளைக் கண்ணால் காண்பதென்பது அரிது. தொடரான இடப்பெயர்வினால் உடமை இழப்புக்களையும் சொத்திழப்புக்களையும் சந்தித்த மக்கள் இவ்வாறான விலையேற்றத்திற்கு ஈடுகொடுத்துப் பொருள்களை வாங்குவதற்கு பெரிதும் திண்டாடினர்.

இந்தச் சூழ்நிலையில்தான் சர்வதேச செஞ்சிலுவைச்சங்கத்தினர் சில மனிதாபிமானப்பணிகளை வன்னியில் மேற்கொள்ளும் செயற்திட்டத்தில் இறங்கினர். இலங்கை அரசாங்கத்தோடு தொடர்பு கொண்டு வன்னியில் காயமடைந்தவர்கள் மேலதிக சிகிச்சைக்கு உட்படுத்தவேண்டியவர்கள் கப்பல் மூலம் திருகோணமலை புல்மோட்டைக்குக் கொண்டு செல்லப்பட்டு புல்மோட்டை, வவுனியா, அனுராதபுரம் ஆகிய வைத்தியசாலைகளில் இவர்களுக்கான மேலதிக சிகிச்சை மேற்கொள்வதோடு ஒரு தொகுதி உணவுப் பொருள் களையும் மருந்துப்பொருள்களையும் கப்பலில் அனுப்பி வைக்கின்ற செயற்திட்டம் ஆரம்பிக்கப்பட்டது.

இதன் முதற்கட்டமாக 10-02-2009 அன்று சர்வதேச செஞ்சிலுவைச் சங்கத்தினது கண்காணிப்பில் திருகோணமலையிலிருந்து வந்த கப்பல் புதுமாத்தளன் பகுதியில் நங்கூரமிட்டது. மாத்தளன் வைத்தியசாலையிலிருந்து அம்புலன்ஸ் வண்டி மூலம் கொண்டுவரப்பட்ட காயமடைந்தவர்கள் ‘புளூஸ்ரார்’ படகுகள் மூலமாக கப்பலுக்கு அனுப்பி வைக்கப்பட்டனர். இவ்வாறு அன்றைய தினம் சுமார் நாநூற்றைம்பது பேர் வரையில் மேலதிக சிகிச்சைக்காக புல்மோட்டைக்கு அனுப்பி வைக்கப்பட்டனர். இரண்டு நாட்களின் பின்னர் ஒரு தொகுதி உணவுப் பொருள்களும், மருந்துப் பொருள்களும் இலங்கை அரசினால் கப்பல் மூலம் வன்னிக்கு அனுப்பி வைக்கப்பட்டன. இவ்வாறு மூன்று நாள்களுக்கு ஒரு தடவை அல்லது நான்கு நாட்களுக்கு ஒரு தடவை சில சந்தர்ப்பங்களில் ஒரு வாரத்திற்கு ஒரு தடவையென ஒருதொகுதி உணவுப் பொருள்களும், மருந்துப்பொருள்களும், கப்பல் மூலம் அனுப்பி வைக்கப்படுவதும் கப்பல் திரும்பிச் செல்லும் போது மேலதிக சிகிச்சைக்கு உட்படுத்தவேண்டிய ஒரு தொகுதி நோயாளர்களையும் ஏற்றிச் செல்வதுமான பணி கட்டம் கட்டமாகத் தொடர்ந்தது.

இவ்வாறு அனுப்பி வைக்கப்படும் உணவுப்பொருள்கள் பல்நோக்குக் கூட்டுறவுச் சங்கத்தின் ஊடாக குடும்ப அங்கத்தவர் அடிப்படையில் நிவாரணமாகப் பகிர்ந்தளிக்கப்பட்டன. வழங்கப்பட்ட நிவாரணப்பொருட்கள் இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கே போது மானது. இருப்பினும் ஒரு நேரச்சாப் பாட்டுக்கே அல்லற்பட்டுக் கொண்டிருந்த மக்களுக்கு இந்த நிவாரணக் கொடுப்பனவு ஓரளவு ஆறுதலைக் கொடுத்தது.

(மிகுதி அடுத்த இதழில்)

# பேச்சுமூலம் அரசு எம்மை ஏமாற்றுமாக இருந்தால் தமிழ் மக்களைத் திரட்டிப் போராடுவதே ஒரே வழி

## அரியநேத்திரன் எம்.பி. தெரிவிப்பு

இலங்கை அரசு தொடர்ந்து பேச்சுமூலம் எங்களை ஏமாற்றுமாகவிருந்தால் வடக்கு, கிழக்கு மக்களுடன் புலம்பெயர்ந்த மக்களையும் அணிதிரட்டி மாபெரும் அகிம்சை ரீதியான கவனயீர்ப்புப் போராட்டத்தை நடத்துவதை தவிர வேறு வழியில்லை - என்று மட்டக்களப்பு மாவட்ட தமிழ் தேசியக் கூட்டமைப்பு நாடாளுமன்ற உறுப்பினர் பா.அரியநேத்திரன் தெரிவித்தார்.

மட்டக்களப்பு, மண்முனை வடக்கு கல்விப் பிரிவுக்குட்பட்ட அமிர்தகழி சித்திவிநாயகர் மகா வித்தியாலயத்தில் நடந்த நிகழ்வில் பிரதம அதிதியாக கலந்து கொண்டு உரையாற்றும்போதே அவர் மேற்கண்டவாறு தெரிவித்தார்.

அங்கு உரையாற்றிய அவர் மேலும் கூறியவை வருமாறு-

எமது வடக்கு ,கிழக்கில் கடந்த 30 வருட காலமாக ஒரு போராட்டம் இடம்பெற்றது. போராட்டம் இடம்பெற்றாலும் கூட வடக்கு, கிழக்கில் ஒழுக்கம் என்பது மிகவும் கட்டுப்பாடாக இருந்துகொண்டிருந்தது.

> தமிழ்த் தேசியக் கூட்டமைப்பானது ஒரு இக்கட்டான காலகட்டத்தில் இருந்துகொண்டிருக்கிறது. இந்த 2012ஆம் ஆண்டு என்ன நடக்கும் என்று தமிழர்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றார்கள்.

இப்போது கலாசார சீர்கேடுகளை எமது தமிழ்ச் சமூகத்தில் பரப்புவதற்குப் பல சக்திகள் திட்டமிட்டு சதிசெய்துகொண்டிருக்கின்றன. இவர்களுக்கு நாங்கள் ஒருபோதும் துணை போகக்கூடாது.

எமது கட்சியான தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை பொறுத்தமட்டில் இந்த அரசிற்கு எதிர்க் கட்சியாக இருந்து கொண்டிருக்கிறோம். நாங்கள் அபிவிருத்திக்காக நாடாளுமன்றம் செல்லவில்லை.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்பானது ஒரு இக்கட்டான காலகட்டத்தில் இருந்துகொண்டிருக்கிறது. இந்த 2012ஆம் ஆண்டு என்ன நடக்கும் என்று தமிழர்கள் பார்த்துக் கொண்டிருக்கின்றார்கள். கடந்த 2011 ஆம் ஆண்டு பேச்சு என்ற நாடகத்திலே நாங்கள் இறங்கியிருந்தோம். 17 சுற்றுப் பேச்சால் காலத்தை கடத்தியிருந்தோம். எங்களை இலங்கை அரசு ஏமாற்றியிருக்கின்றது.

எமது தமிழர் உரிமைக்கான போராட்டம் என்பது இலங்கைக்கு அப்பால் சர்வதேச சமூகத்திடம் சென்றிருக்கிறது. சர்வதேச சமூகத்தின் அழுத்தம் காரணமாக தமிழ்த் தேசியக் கூட்டமைப்புடன் இலங்கை அரசு பேசிக்கொண்டிருகின்றது. தொடர்ந்தும் அரசு எங்களை ஏமாற்றிக்கொண்டிருக்குமாக இருந்தால் பேச்சிலிருந்து விலகிச்செல்வது தவிர்க்க முடியாததாக இருக்கும்.

கடந்த 62வருட காலத்திலே எமது மிதவாத அரசியல் தலைவர்கள் நடத்திய அகிம்சைப் போராட்டம். அதற்குப் பின் நடந்த ஆயுதப்போராட்டம் என்பவற்றிலிருந்து வித்தியாசமாக அரசு எங்களை ஏமாற்றிக்கொண்டிருக்கின்றது. அசிற்கு அழுத்தம் கொடுத்து தமிழ் மக்களுக்கான அரசியல் தீர்வைப் பெற்றுத்தரும்படி சர்வதேசத்திற்கு அழுத்தம் கொடுக்கின்ற நடவடிக்கையை தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு எடுப்பது தவிர்க்க முடியாது போகும்.

வடக்கு, கிழக்கு மக்களுடன் புலம்பெயர்ந்த மக்களையும் அணிதிரட்டி மாபெரும் அகிம்சை ரீதியான கவனயீர்ப்புப் போராட்டத்தை நடத்துவதை தவிர வேறு வழியில்லை. இந்த வழியை இலங்கை அரசு எம்மீது சுமத்துமாக இருந்தால் அதை சகித்துக்கொள்ள வேண்டிய தேவை அதற்கு இருக்கிறது. சர்வதேசத்திற்கும் இருக்கின்றது.

ஏனென்றால் ஆயுதப் போராட்டத்தை அடக்கியதாக கூறும் 20 நாடுகளுக்கும் எமது தமிழ் மக்களுக்கான உரிமையைத் தர வேண்டிய கடப்பாடு இருக்கின்றது. போராட்டத்தை அடக்கிவிட்டு அவர்கள் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க முடியாது. தமிழ் மக்களுக்கான அரசியல் தீர்வு தர வேண்டிய காலகட்டத்தில் அவர் கள் இருக்கின்றார்கள்.

இந்த 2012ஆம் ஆண்டு அந்தக் காலகட்டத்தில் தான் தமிழ்த்தேசி யக் கூட்டமைப்பு பயணித்துக்கொண்டிருக்கின்றது. பல விமர்சனங்களும் குற்றச்சாட்டுகளும் எங்கள் மீது சுமத்தப்படுகின்றன.

ஜனாதிபதியை எந்த வகையில் தென்னிலங்கை சிங்கள மக்கள் ஆதரித்து தலைமை தாங்க விட்டார்களோ அதே வகையில் வட கிழக்கிலே இருக்கின்ற தமிழ் மக்கள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பிற்கு தலைமை தாங்குவதற்குரிய ஆணையைத் தந்திருக்கின்றார்கள்.

அந்த ஆணையை தொடர்ந்து பாதுகாக்க வேண்டிய கடப்பாடு எங்களுக்கு இருக்கின்றது - என்றார் அவர்.



# சிறகு வலைத் தொழிலுக்கு கடற்படையினர் கட்டுப்பாடு

சுழிபுரம் திருவடி நிலைக் கடற்கரைப் பகுதியில் சிறகு வலைத் தொழிலை மேற்கொள்ளக் கடற்படையினர் பல்வேறு கட்டுப்பாடுகளை விதித்துள்ளனர். இதன் காரணமாக இந்தத் தொழிலை நம்பி வாழும் குடும்பங்கள் பெரும் வருமான இழப்பைச் சந்தித்துள்ளதாகத் தெரிய வருகிறது.

> கடற்கரைப் பகுதியில் நடமாடிச் சிறகு வலைத் தொழிலில் ஈடுபட முடியாது எனக் கடற் படை கண்டிப்பான உத் தரவைப் பிறப்பித்துள்ளது. அத்துடன் இறங்கு துறை ஊடாகவே கட லுக்குச் சென்று தொழில் செய்ய வேண்டும் எனவும் கடற்படை அறிவித்துள்ளது

திருவடிநிலைப் பகுதிக்குப் பொறுப்பாகப் புதிய கடற்படை அதிகாரி ஒருவர் வந்த பின்னரே இவ்வாறு கட்டுப்பாடுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளதாகக் கடற்தொழிலாளர்கள் கூறுகின்றனர்.

கடற்கரைப் பகுதியில் நடமாடிச் சிறகு வலைத் தொழிலில் ஈடுபட முடியாது எனக் கடற்படை கண்டிப்பான உத்தரவைப் பிறப்பித்துள்ளது. அத்துடன் இறங்கு துறை ஊடாகவே கடலுக்குச் சென்று தொழில் செய்ய வேண்டும் எனவும் கடற்படை அறிவித்துள்ளதுடன் கடலில் மீன வர்கள் செல்வதைத் தடுத்துக் கம்பித் தடுப்பும் போடப்பட்டுள்ள தாக மீனவர்கள் கூறு கின்றனர்.

திருவடி நிலைக் கடற்கரைப் பகுதியில் காலம் காலமாக மேற்கொள்ளப்பட்டு வந்த சிறகு வலைத் தொழிலுக்குக் கடற்படை கட்டுப்பாடு விதித்துள்ளமை தொடர்பாகக் கடற்படை உயர் அதிகாரிகளுக்கு அறிவித்துள்ளதாக அந்தப் பகுதிக்குரிய கடற்தொழிலாளர் சங்கத் தலைவர் எஸ். தெய்வேந்திரம் தெரிவித்தார்.

இந்த விடயம் தொடர்பாகத் தலைவர் மேலும் தெரிவித்தவை வருமாறு:-

கடந்த 10 ஆம் திகதி சிறகு வலை போடப் போன போது திருவடி நிலையிலுள்ள கடற்படை அதிகாரி ஒருவர் அதற்குத் தடை விதித்தார். கடலுக்குள்ளே படகில் சென்று தொழில் செய்யுமாறு கூறினார். சிறகு வலைத் தொழில் என்பது கடற்கரையில் நின்று கடலில் வலை எறிந்து மேற்கொள்வதாகும்.

யுத்த காலம் தொடக்கம் சிறகு வலைத் தொழில் செய்த எமக்குப் புதிய கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. இவற்றைத் தவிர்க்குமாறு கிராம அலுவலர், பிரதேச செயலர் ஆகியோரின் உறுதிப்படுத்தப்பட்ட கடிதம் ஒன்றைக் கடற்படை அதிகாரிக்கு வழங்கியுள்ளோம். கடந்த வெள்ளிக்கிழமை வழங்கிய கடிதத்துக்கு பதில் இல்லை என்றார்.

# யாழ்.குடாநாட்டில் குவியும் மோ.சைக்கிள், ஓட்டோக்கள்!

யாழ்ப்பாணம், ஜன.20

யாழ்.மாவட்டத்தில் மோட்டார் சைக்கிள் மற்றும் ஓட்டோக்களின் எண்ணிக்கை அதிகரித்துச் செல்கின்றது. இருப்பினும் 2006 ஆம் ஆண்டு இருந்த மினிபஸ், இரட்டைத் தேவை வாகனங்களின் எண்ணிக்கை கடந்த வருடம் குறைவடைந்துள்ளது.

இவ்வாறு வடமாகாண மோட்டார் போக்குவரத்து ஆணையாளர் பி.ஜெயகரன் தெரிவித்தார்.

இந்த விடயம் தொடர்பாக அவர் மேலும் தெரிவித்ததாவது:

யாழ்.மாவட்டத்தில் 2006 ஆம் ஆண்டு 34 ஆயிரத்து 325 ஆக இருந்த மோட்டார் சைக்கிள் பாவனை 2010 ஆம் ஆண்டு 48ஆயிரத்து 360 ஆக அதிகரித்தது. 2011ஆம் ஆண்டு மேலும் அதிகரித்து 60 ஆயிரத்து 36 ஆகக் காணப்பட்டது.

ஓட்டோக்களைப் பொறுத் தவரையில் 2006 ஆம் ஆண்டு ஆயிரத்து 452 ஆக இருந்தது. இது 2010 ஆம் ஆண்டு 4 ஆயிரத்து 17 ஆகவும் 2011 ஆம் ஆண்டு 5 ஆயிரத்து 659 ஆகவும் காணப்பட்டது.

2006 ஆம் ஆண்டு 3 ஆயிரத்து 250 ஆகக் காணப்பட்ட கார்களின் எண்ணிக்கை 2010 ஆம் ஆண்டு ஆயிரத்து 850 ஆகக் குறைவடைந்து 2011 ஆம் ஆண்டு அதிகரித்து 2 ஆயிரத்து 432 ஆகக் காணப்பட்டது.

லாண்ட்மாஸ்ரர், டிரக்டர்கள் 2006 ஆம் ஆண்டு 2 ஆயிரத்து 250 ஆகக் காணப்பட்ட போதும் 2010 ஆம் ஆண்டு 4 ஆயிரத்து 327 ஆக அதிகரித்தது. இது 2011 ஆம் ஆண்டு 4 ஆயிரத்து 911 ஆகக் காணப்பட்டது.

2006 ஆம் ஆண்டு 2 ஆயிரத்து 200 ஆகக் காணப்பட்ட லொறிகளின் எண்ணிக்கை 2010 ஆம் ஆண்டு ஆயிரத்து 723 ஆகக் குறைவடைந்து 2011 ஆம் ஆண்டு மீண்டும் அதிகரித்து 2 ஆயிரத்து 355 ஆகக் காணப்பட்டது.

மினிபஸ் 2006 ஆம் ஆண்டு ஆயிரத்து 350 ஆகக் காணப்பட்டபோதும் 2010 ஆம் ஆண்டு 692 ஆகக் குறைவடைந்துள்ளது. 2011 ஆம் ஆண்டு மீண் ம் அதிகரித்து 724 ஆகக் காணப்பட்டது.

2006 ஆம் ஆண்டு 2 ஆயிரத்து 250 ஆகக் காணப்பட்ட இரட்டைத் தேவை வாகனங்கள் 2010 ஆம் ஆண்டு ஆயிரத்து 307 ஆகக் குறைவடைந்து 2011 ஆம் ஆண்டு மீண்டும் ஆயிரத்து 347 ஆக அதிகரிக்கப்பட்டிருந்தது.

அரச வாகனங்கள் 2006 ஆம் ஆண்டு 800 ஆகக் காணப்பட்டது. 2010 ஆம் ஆண்டு 115 ஆக குறைவடைந்து 2011 ஆம் ஆண்டு 120 ஆக அதிகரித்து இருந்தது என்றார்.

# ஆசிரியரைத் தாக்கிய அதிபர் கேட்டார் மன்னிப்பு பகிரங்கமாக

பாடசாலையில் வைத்து ஆசிரியையை ஒருவரைத் தாக்கிய குற்றச்சாட்டில் சம்பந்தப்பட்ட அதிபர் நீதிமன்றில் பகிரங்க மன்னிப்புக் கோரியதை அடுத்து அந்த வழக்கு சுமூகமாக முடிவுக்குக் கொண்டுவரப்பட்டது.

விசாரணையில் இருந்து வந்த இந்த வழக்கு யாழ். நீதிமன்ற நீதிவான் மா.கணேசராஜா முன்னிலையில் கடந்த செவ்வாய்கிழமை விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. யாழ். கல்வி வலயத்துக்கு உட்பட்ட பாடசாலை ஒன்றில் சுமார் 3 மாதங்களுக்கு முன்னர் ஆசிரியையை பிரஸ்தாப அதிபர் தாக்கினார். இதையடுத்து வழக்கு நீதிமன்றில் தாக்கல் செய்யப்பட்டு விசாரணையில் இருந்து வந்தது. கடந்த செவ்வாய்க்கிழமை நீதிமன்றில் வைத்து பாடசாலையில் அவ்வாறு நடந்து கொண்டதற்காக அதிபர் மன்னிப்புக் கோருவதாக கூறியதை அடுத்து இரு தரப்பினரும் அந்த வழக்கை முடிவுக்கு கொண்டுவர இணக்கம் தெரிவித்ததை அடுத்து அது முடித்து வைக்கப்பட்டது.



# டெங்கு ஒழிப்புக்கு ஐரோப்பிய ஒன்றியம் 11 லட்சம் யூரோ நிதி

கொழும்பு,ஜன.20

இலங்கையில் டெங்கு ஒழிப்புக்காக 11 இலட்சம் யூரோ நிதியுதவி வழங்க ஐரோப்பிய ஒன்றியம் முன்வந்துள்ளது என அமைச்சரவைப் பேச்சாளரும் அமைச்சருமான கெஹெலிய ரம்புக்வெல்ல தெரிவித்தார்.டெங்கு உள்ளிட்ட ஏனைய நோய்களுக்கான காரணிகளை அடையாளம் காண்பதற் கான நான்கு வருட ஆய்வுத் திட்டத்திற்கு இந்த நிதியுதவியைப் பயன்படுத்தவுள்ளோம் என்றும் அவர் தெரிவித்தார்.

## இலங்கை....

(10 ஆம் பக்கத் தொடர்ச்சி)

எவராவது அக்கறை காட்டுகிறார்களா? இல்லையே.

அரச திணைக்களம் ஒன்றில் கட்மையாற்றும் கீழ்மட்ட ஊழியர் ஒருவரிடம் ஒருமுறை எனது இந்த ஆதங்கத்தைப் பகிர்ந்து கொண்டேன். அவர் சிரித்தபடியே இந்தக் கட்டடத்தைச் சூழவுள்ள வெற்று நிலத்தில் சிறுதானியப் பயிர்ச் செய்கையை மேற்கொள்ள நாம் விரும்புகிறோம்தான். ஆனாலும் அதற்கான முயற்சியும் முன்னெடுப்பும் மேல் மட்டத்திலிருந்து ஆரம்பிக்கப்பட வேண்டியதுதானே நியாயமும் பொருத்தமும் ஆகும் எனப் பதிலளித்தார்.

இந்தியாவில் தற்போது இத்தகைய விழிப்புணர்வு பெருமளவில் தலை தூக்கியுள்ளது. ஆனால் நாம் இன்றும் எமது அதே பழைய பாணியிலேயே எமது வாழ்க்கை நடைமுறையை நகர்த்திச் செல்கிறோம். அதில் திருப்திப்பட்டுக் கொள்கிறோம். இந்த லட்சணத்தில் இலங்கையை மற்றொரு சிங்கப்பூராக உருவாக்கிக் காட்டுகிறோம் என்ற அரசியல்வாதிகளின் 'கயிறு' கள்வேறு. நாம் யதார்த்தத்தைப் புரிந்து செயற்பட இன்னும் எத்தனை ஆண்டுகள் காலம் செல்லப்போகிறது என்ற கேள்வி என்றுமே விடைகாண இயலாத வினாவாகப் புதிராகத்தான் இருக்கும்.

# ஜனவரி 25 'கறுப்பு ஜனவரி'யாகப் பிரகடனம்

ஊடக அடக்கு முறைகளுக்கு எதிராக போராட்டம் ஒன்றை ஒழுங்கு செய்து குரல் கொடுக்கும் நோக்கில் ஊடகங்களின் சம்மேளனமானது எதிர்வரும் 25ஆம் திகதியை ''கறுப்பு ஜனவரி''யாகப் பிரகடனப்படுத்தியுள்ளது.

இதுவரையில் இடம்பெற்ற ஊடகவியலாளர்கள் மீதான தாக்குதல்கள், கடத்தல்கள், கொலைகள் என்பனவற்றுக்கு இதுவரையில் அரசினால் எந்தவொரு சட்ட நடவடிக்கையும் எடுக்கப்படாத நிலையிலேயே இந்தப் பிரகடனத்தை மேற்கொண்ட தாக சுனின் ஜெயசேகர தெரிவித்துள்ளார்.

லசந்த விக்கிரமசிங்கவின் கொலை, பிரகீத் எக்னாலிகொடவின் கடத்தல், சிரச ஊடகம் மீதான தாக்குதல் போன்றவை ஜனவரி மாதத்திலேயே இடம்பெற்றன. இதன்காரணமாகவே எதிர்வரும் 25 ஆம் திகதியை 'கறுப்பு ஜனவரி'யாக பிரகடனப்படுத்தியதாக அவர் தெரிவித்தார்.

எதிர்வரும் 25 ஆம் திகதி கொழும்பு, கோட்டை ரயில் நிலையத்துக்கு முன்பாக பிற்பகல் 2.30 மணிக்கு அனைத்து ஊடகங்களும் இந்தப் போராட்டத்தில் கலந்துகொள்ளும் என்று அவர் தெரிவித்தார்.

## அடிபணிந்தது...

(முதலாம் பக்கத் தொடர்ச்சி)

காணி அமைச்சு மாவட்டச் செயலகங்களுக்குச் சுற்றறிக்கை மூலம் உத்தரவு பிறப்பித்திருந்தது.

இதனை எதிர்த்து நாடாளுமன்ற உறுப்பினரும் சட்டத்தரணியுமான எம்.ஏ.சுமந்திரன் மேல்முறையீட்டு நீதிமன்றில் மனு தாக்கல் செய்திருந்தார்.

காணி ஆணையாளர் நாயகத்தின் சுற்றறிக்கையை உடன் ரத்துச் செய்யுமாறும் வடக்கு - கிழக்கு மாகாணங்களில் மேற்கொள்ளப்பட்டுவரும் காணிப் பதிவு நடவடிக்கைகளை நிறுத்த இடைக்காலத் தடை உத்தரவு பிறப்பிக்குக என்றும் அந்த மனுவில் அவர் கேட்டிருந்தார்.

எந்தக் காரணமும் இன்றி இரண்டு மாதங்களுக்குள் காணிகளைப் பதிவு செய்யவேண்டும் என்று காணி ஆணையாளர் நாயகம் உத்தரவிட்டுள்ள அதே வேளை, அவ்வாறு பதிவு செய்யப்படாவிட்டால் அதன் விளைவு என்ன என்பதைக் காணி ஆணையாளர் நாயகம் குறிப்பிடவில்லை என்றும் மனுவில் தெரிவிக்கப்பட்டிருந்தது.

நவம்பர் 9ஆம் திகதி மனுவை விசாரணைக்கு எடுத்துக்கொண்ட மேல் நீதிமன்றம் ஜனவரி 19ஆம் திகதி வரை அந்தச் சுற்றறிக்கை தொடர்பான அறிவித்தலுக்கு இடைக்காலத் தடைவிதித்தது.

நீதியரசர்கள் ஸ்ரீஸ்கந்தராசா மற்றும் தீபாலி விஜயசுந்தர ஆகியோர் முன்னிலையில் மனு மீண்டும் நேற்று விசாரணைக்கு வந்தது. அப்போது, பிரதி சட்டமா அதிபர் முருது பெர்னாண்டோ, ''குறித்த அந்தச் சுற்றறிக்கையை காணி மற்றும் காணி மறுசீரமைப்பு அமைச்சர் முற்றாக வாபஸ் பெறுவதாகத் தெரிவித்துள்ளார்'' என்று நீதிமன்றில் அறிவித்தார்.

இதனை அடுத்து மனு மீதான விசாரணையை மார்ச் மாதம் 27ஆம் திகதிக்கு ஒத்தி வைத்த நீதியரசர்கள், வழக்கைத் தொடர்வதா இல்லையா என்பதை அன்றைய தினம் மன்றுக்கு அறிவிக்குமாறு மனுதாரருக்கு உத்தரவிட்டார்.

# சிவில் சமூகத்தின் அறிக்கையை நாம் புறந்தள்ளிவிட முடியாது

**சிவில் சமூகம் யார்? யார் அதில் உள்ளார்கள்? யார் கையொப்பமிட்டார்கள்? என ஆராய்வதை விட அவர்களும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு வாக்களித்த புத்திஜீவிகள் என்பதுதான் முக்கியமானது என்கிறார் அரியநேத்திரன் எம்.பி.**

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு சிவில் சமூகத்தினர் அனுப்பிவைத்த அறிக்கையைப் புறந்தள்ளிவிடமுடியாது. அதில் பல நியாயமான கருத்துக்கள் உள்ளன என்று கூட்டமைப்பின் மட்டக்களப்பு மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர் பா.அரியநேத்திரன் தெரிவித்துள்ளார்.

அண்மையில் சிவில் சமூகத்தின் அறிக்கையொன்று தமிழ்த் தேசியக் கூட்டமைப்புக்கு அனுப்பி வைக்கப்பட்டிருந்தது.

அந்த அறிக்கை பத்திரிகைகளில் பிரசுரமாகியிருந்தது. இது தொடர்பில் கடந்த 3ஆம் திகதி மட்டக்களப்பு அமெரிக்க மிஷன் மண்டபத்தில் இடம்பெற்ற இலங்கைத் தமிழரசுக் கட்சியின் கூட்டத்தில் நாடாளுமன்ற உறுப்பினர் மாவை சேனாதிராசா பின்வருமாறு தெரிவித்தார்.

"படித்து பட்டம் பெற்றவர்களே மக்களைக் குழப்புகிறார்கள். குழப்ப முற்படுகிறார்கள். சிவில் சமூகம் என்ற அமைப்பு அண்மைக் காலத்தில் வெளியிட்ட அறிக்கையில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பானது அரசுடனான பேச்சில் நெகிழ்வுத் தன்மையைக் கடைப்பிடிக்கின்றது - என்றார்.

இதற்குக் கருத்து தெரிவிக்கும் முகமாகவே மட்டக்களப்பு மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர் பா. அரியநேத்திரன் இவ்வாறு தெரிவித்தார்.

இது தொடர்பில் அவர் தொடர்ந்து தெரிவித்ததாவது:

சிவில் சமூகத்தினர் அனுப்பி வைத்த அறிக்கையில் பல நியாயமான கருத்துக்கள் உண்டு. அந்த அறிக்கை யைப் புறந்தள்ளிவிட முடியாது.

எனினும் அந்த அறிக்கையில் சில நியாயமற்ற கருத்துக்களும் உண்டு. அவர்களுடன் எமது தலைவர் சம்பந்தன் மிக விரைவில் பேசுவார். சிவில் சமூகம் யார்? யார் அதில் உள்ளார்கள்? யார் கையொப்பமிட்டார்கள்? என ஆராய்வதை விட அவர்களும் தமிழ்த் தேசியக் கூட்ட மைப்புக்கு வாக்களித்த புத்திஜீவிகள் என்பதுதான் முக்கியமானது- என்றார்.

இது தொடர்பில் கருத்துத் தெரிவித்த அகில இலங்கை தமிழ் காங்கிரஸின் மட்டக்களப்பு மாவட்ட அமைப்பாளர் பூபா.மதுரநாயகம், தமிழ் மக்கள் உரிமைகளுடன் வாழ வேண்டும் என்று விரும்புவது சிவில் சமூகம். அன்று தமிழர்களின் பிரச்சினை தீர்த்து வைக்கப்பட வேண்டும் என்பதற்காக பெருபான்மையான தமி ழர்களை தமிழ் தேசியக் கூட்டமைப்புக்கு வாக்களிக்க வைத்தவர்கள் சிவில் சமூகத்தினர்.

தமிழ் பேசும் மக்களின் நலனில் அதிக அக்கறை கொண்டதுடன் அதற்காக பல வியூகங்களை வகுத்து திரை மறைவில் இருந்து செயற்பட்டவர்கள் சிவில் சமூகத்தை சேர்ந்தவர்கள். இதை யாரும் மறுக்க முடியாது - என்றார்.

# மின்சாரம் திருடினால் 'வாழ்நாள் தண்டனை'!

கொழும்பு,ஜன.2

மின்சாரத்தைத் திருட்டுத் தனமாகப் பெறுபவர்கள் கண்டுபிடிக்கப்பட்டால் அவர்களுக்கு சட்டபூர்வமான தண்டனையும் அபராதத் தொகையும் வழங்கப்படுவதுடன் இனிமேல் சம்பந்தப்பட்டவர்களுக்கு வாழ் நாள் முழுவதும் மின்சார இணைப்பு கொடுக்கப்படமாட்டாது என்று மின்சக்தி எரிசக்தி அமைச்சர் பாட்லி சம்பிக்க ரணவக்க தெரிவித்துள்ளார்.

அமைச்சரின் உத்தரவின் பேரில் இந்தப் புதிய சட்டப்பிரமாணங்கள் நடைமுறைப்படுத்தப்படும்போது ஒரு தடவை சட்டவிரோதமாக மின்சார இணைப்பை பெற்று இலங்கை மின்சார சபையை ஏமாற்றியவர்கள் வாழ் நாள் முழுவதும் தண்டிக்கப்படுவார்கள் என்று அமைச்சின் சிரேஷ்ட அதிகாரியொருவர் தெரிவித்தார்.

சட்டவிரோதமாக மின்சார இணைப்பை பெறுவதனால் இலங்கை மின்சார சபை இது வரையில் 6ஆயிரம் மில்லியன் ரூபா நஷ்டமடைந்துள்ளது. இவர்கள் தேசிய ரீதியில் உற்பத்தி செய்யும் மின்சாரத்தில் 4 சதவீதத்தை திருடுகிறார்கள் என்று அவர் தெரிவித்தார்.

கிராமப்புறங்களில் மின்சாரம் சட்டவிரோதமாக பெறப்படுவதனால் கடந்த ஆண்டில் மின்சாரம் தாக்கி 25பேர் மரணித்து இருக்கிறார்கள் என்று அவர் மேலும் தெரிவித்தார்.

# மரண அறிவித்தல்கள்



**சலமோன் பர்னாந்து**
பிறந்த இடம் : பாஷையூர்
வாழ்ந்த இடம் : பாஷையூர்
இறந்த திகதி : 09.01.2011



**திருமதி ரத்தினம் தங்கரத்தினம்**
பிறந்த இடம் : திருநெல்வேலி
வாழ்ந்த இடம் : உடுவில்
இறந்த திகதி : 09.01.2012



**கந்தவனம் பாலசுப்பிரமணியம்**
பிறந்த இடம் : சுன்னாகம்
வாழ்ந்த இடம் : கனடா
இறந்த திகதி : 08.01.2012



**இராசஜா யோகராஜா**
பிறந்த இடம் : நல்லூர்
வாழ்ந்த இடம் : நல்லூர்
இறந்த திகதி : 10.01.2012



**நாகராஜா தவமணி**
பிறந்த இடம் : வேலணை
வாழ்ந்த இடம் : நல்லூர்
இறந்த திகதி : 10.01.2012



**செல்லத்துரை சிவகணேசதாசன்**
பிறந்த இடம் : அச்சுவேலி
வாழ்ந்த இடம் : அச்சுவேலி
இறந்த திகதி : 11.01.2012



**திருமதி ஆறுமுகம் தங்கம்மா**
பிறந்த இடம் : சரசாலை
வாழ்ந்த இடம் : சாவகச்சேரி
இறந்த திகதி : 10.01.2012



**இராமபிள்ளை சேதுராஜா**
பிறந்த இடம் : அரியாலை
வாழ்ந்த இடம் : நல்லூர்
இறந்த திகதி : 09.01.2012



**திருமதி பிலோமினா மகாதேவன்**
பிறந்த இடம் : மலேசியா
வாழ்ந்த இடம் : இளவாலை
இறந்த திகதி : 09.01.2012



**திருமதி கனலிங்கம் திருமேனிப்பிள்ளை**
பிறந்த இடம் : புங்குடுதீவு
வாழ்ந்த இடம் : கொழும்பு
இறந்த திகதி : 12.01.2012



**கனகசபை நடராசா**
பிறந்த இடம் : காரைநகர்
வாழ்ந்த இடம் : நல்லூர்
இறந்த திகதி : 12.01.2011



**செல்வரட்ணம் பூமணி**
பிறந்த இடம் : கரம்பன்
வாழ்ந்த இடம் : யாழ்ப்பாணம்
இறந்த திகதி : 13.01.2012



**மரியதாசன் பர்ப்பரா**
பிறந்த இடம் : யாழ்ப்பாணம்
வாழ்ந்த இடம் : யாழ்ப்பாணம்
இறந்த திகதி : 13.01.2012



**கருணாமூர்த்தி நந்தினி**
பிறந்த இடம் : தெல்லிப்பழை
வாழ்ந்த இடம் : தெல்லிப்பழை
இறந்த திகதி : 15.01.2012



**வேலு ராமு**
பிறந்த இடம் : சங்கானை
வாழ்ந்த இடம் : சங்கானை
இறந்த திகதி : 14.01.2012



**கந்தையா பொன்னையா**
பிறந்த இடம் : மட்டுவில்
வாழ்ந்த இடம் : கொக்குவில்
இறந்த திகதி : 13.01.2012



**அருணாசலம் இராசலிங்கம்**
பிறந்த இடம் : மானிப்பாய்
வாழ்ந்த இடம் : மானிப்பாய்
இறந்த திகதி : 12.01.2012



**வேலாயுதர் கோபாலகிருஷ்ணன்**
பிறந்த இடம் : கைதடி
வாழ்ந்த இடம் : கைதடி
இறந்த திகதி : 14.01.2012



**கந்தையா தாமோதரம்பிள்ளை**
பிறந்த இடம் : தையிட்டிபுலம்
வாழ்ந்த இடம் : அளவெட்டி
இறந்த திகதி : 15.01.2012



**பூமணி செல்வரட்ணம்**
பிறந்த இடம் : கரம்பன்
வாழ்ந்த இடம் : யாழ்ப்பாணம்
இறந்த திகதி : 137.01.2012



**சிவபாதம் சிவரஞ்சன்**
பிறந்த இடம் : நாவற்குழி
வாழ்ந்த இடம் : சுன்னாகம்
இறந்த திகதி : 13.01.2012



**இளையப்பு முத்துவேலு**
பிறந்த இடம் : நீர்வேலி
வாழ்ந்த இடம் : நீர்வேலி
இறந்த திகதி : 15.01.2012



**இரத்தினம் சின்னமணி**
பிறந்த இடம் : புத்தூர்
வாழ்ந்த இடம் : கொழும்பு
இறந்த திகதி : 15.01.2012



**திருமதி முருகேசபிள்ளை அன்னம்மா**
பிறந்த இடம் : இளவாலை
வாழ்ந்த இடம் : இணுவில்
இறந்த திகதி : 16.01.2012



**கமலாதேவி புஸ்பராஜா**
பிறந்த இடம் : அரியாலை
வாழ்ந்த இடம் : அரியாலை
இறந்த திகதி : 09.01.2012



**கனகராயர் சிவபாலன்**
பிறந்த இடம் : தெல்லிப்பழை
வாழ்ந்த இடம் : தெல்லிப்பழை
இறந்த திகதி : 16.01.2012



**ஜெயானந்தம் வசந்தராணி**
பிறந்த இடம் : பருத்தித்துறை
வாழ்ந்த இடம் : நல்லூர்
இறந்த திகதி : 14.01.2012



**நித்தியானந்தசர்மா சறோஜினிதேவி**
பிறந்த இடம் : உடுவில்
வாழ்ந்த இடம் : சங்குவேலி
இறந்த திகதி : 16.01.2012



**திருமதி மனோன்மணிதேவி பவானந்தன்**
பிறந்த இடம் : பருத்தித்துறை
வாழ்ந்த இடம் : அச்சுவேலி
இறந்த திகதி : 17.01.2012



**சின்னத்தம்பி தங்கராசா**
பிறந்த இடம் : சுன்னாகம்
வாழ்ந்த இடம் : சுன்னாகம்
இறந்த திகதி : 17.01.2012

மேலதிக விவரங்களை அறிய www.onlineuthayan.com

# கனடா மார்க்கம் மாநகரசபை மண்டபத்தில் நடைபெற்ற தைப்பொங்கல் நிகழ்வு







தமிழர் திருநாளான தைப் பொங்கல் திருநாள் முதன் முதலாக கனடா நாட்டில் மார்க்கம் மாநகர சபையில் உத்தியோகபூர்வமாகக் கொண்டாடப்பட்டது.

தமிழர்கள் மாத்திரமன்றி பல்லின மக்கள் ஒன்றிணைந்து வாழும் மார்க்கம் மாநகர சபை மண்டபத்தில் மார்க்கம் நகர சபையின் முதலாவது தமிழ் அங்கத்தவரான திரு. லோகன் கணபதியின் பாரியார் இராஜேஸ்வரி, கனடாவின் முதலாவது தமிழ் எம்.பி. செல்வி ராதிகா சிற்சபைஈசன் மார்ககம் பாடசாலை அறங்காவலர் யுவனிதா நாதன் ஆகியோர் பொங்கல் பொங்கினார்கள்.

தமிழர் திருநாளான தைப்பொங்கலையும் புது வருடத் தினத்தையும் தமி ழர்களின் பாரம்பரிய தினமாக மார்க்கம் மாநகர சபையினால் பிரகடனப்படுத்த திரு.லோகன் கணபதி கடந்த பல வருட காலமாக மேற்கொண்டு வந்த முயற்சி இவ்வருடம் கைகூடி வந்துள் ளது. கொண்டாடப்பட்ட இப் பொங் கல் விழா உலகெங்கும் வாழும் தமிழ் மக்களை உவகை கொள்ளச் செய்யும் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பொங்கலாகும்.

இவ்விழாவில் பிரதம விருந்தினராகக் கலந்து கொண்ட தமிழ் எம்.பி. செல்வி ராதிகா சிற்சபைஈசன் உரையாற்றுகையில் தை பிறந்தால் வழி பிறக்கும் என்பார்கள். அதனால் உலகெங்கும் பரந்து வாழும் தமிழ் மக்கள் இன்புற்றிருக்க இன்று முதல் புதிய வழி பிறக்கும். எங்களை அடையாளப் படுத்தும் எமது கலாச்சார பாரம்பரி யங்களை நாம் கடைப்படித்து வாழ வேண்டும். நான் ஐந்து வயதுச் சிறுமியாக கனடாவுக்கு வந்த போதிலும் எனது பெற்றோர் தமிழ் பாரம்பரியங்களுடனேயே என்னை வளர்த்தார்கள். இன்றைய நாளை மார்க்கம் மாநகரில் தமிழினத்தின் பாரம்பரிய நாளாகப் பிரகடனப் படுத்திய திரு.லோகன் கணபதிக்கு நாமனைவரும் நன்றியும் பாராட்டும தெரிவிக்க கடமைப்பட்டுள்ளோம் என்றார்.

பிரதம விருந்தினராகக் கலந்து கொண்ட ஒன்ராறியோ மாகாண கலாசார அமைச்சர் திரு.மைக்கல் சான் உரையாற்றுகையில் பல்லின மக்கள் வாழும் மாநகர சபையில் தமிழ் மக்களின் பொங்கல் திருநாள் கொண்டாடப்படுவது மிக்க மகிழ்ச்சிக்குரியது. தமிழ் மக்கள் சிறந்த பாரம்பரியத்தையும், கலாசாரத்தினையும் கொண்டவர்கள். அத்துடன் கடின உழைப்பாளிகள். தமிழ் மக்கள் அனைவருக்கும் நன்மை ஏற்பட வாழ்த்துகிறேன் என்றார்.

இவ்விழாவில் கலந்து கொண்ட சிறுமி நிதுசா பரராஜசிங்கம் ''மொழியை மறந்தவன் தன் அடையாளத்தை இழந்தவன் ஆகின்றான்'' என்ற பேச்சு அனைவரையும் கவர்ந்திருந்தது.



## வன்னி மக்களுக்கு புலம்பெயர் தமிழர்களே உதவ வேண்டும்

### கனேடியப் படைப்பாளிகள் கழகம்

வன்னியில் வாழ்வாதாரங்களை இழந்து இடைத்தங்கல் கொட்டில் களில் அல்லல் படும் எமது மக்களது அவலத்தை எண்ணிப் பார்த்து, அவர்களின் வாழ்வாதரத்தை வழமை நிலைக்குக் கொண்டுவர நாம் முன்னிற்க வேண்டும் என்று கனேடியப் படைப்பாளிகள் கழகத்தின் தலைவர் தங்கவேலு நக்கீரன் தெரிவித்துள்ளார்.

இலங்கை அரசு வன்னி மக்களைக் கை விட்டுவிட்டது. புலம்பெயர் தமிழர்களே இவர்களின் வாழ்வா தாரத்தை உயர்த்த வேண்டும் என்றும் பொங்கல் விழாவை ஆரம்பித்து வைத்துப் பேசியபோது அவர் கேட்டுக்கொண்டார்.

கனேடியப் படைப்பாளிகள் கழகத் தால் ஏற்பாடு செய்யப்பட்ட தமிழ்ப் புத்தாண்டு நிகழ்வு மற்றும் தைப் பொங்கல் நிகழ்வில், வன்னி மக்களுக்கு முன்மாதிரியாக மேற்கொள்ளப்பட்ட நிதி சேகரிப்பின் படி சுமார் 1,500 டொலர்கள் அந்த நிகழ்விலேயே சேர்க்கப்பட்டு கனடா மறுவாழ்வுக் கழகத்திடம் வழங்கப்பட்டது.

இலங்கை அரசு வன்னி மக்களைக் கை விட்டுவிட்டது. புலம்பெயர் தமிழர்கள்தான் இவர்களின் வாழ்வாதாரத்தை உயர்த்த வேண்டும்.

நாம் எமது விசேட தினங்களை கொண்டாடும் போது அல்லலுறும் எமது மக்களின் வாழ்வாதாரத் துக்கும் உதவி புரிய வேண்டும் என்பதை இனிமேல் தொடர்ச்சியாக கடைப்பிடிக்கும் முன்மாதிரியை தமிழ்ப் படைப்பாளிகள் கழகம் தொடர்ந்து கடைப்பிடிக்கும் - என்றார்.

கனேடியத் தமிழ்ப் படைப்பாளிகள் கழகம் இந்த விழாவை அனைத்துலக தமிழ்ப் பண்பாட்டு இயக்கத்தோடு இணைந்து நடத்தியிருந்தது. இந்த நிகழ்வில் கனடாத் தமிழர் இணையம், கனடா மறுவாழ்வு அமைப்பு, தமிழர் தொலைக் காட்சி, நாடுகடந்த தமிழீழ அரசு, தமிழர் புனர்வாழ்வுக்கழகம் ஆகியவற்றின் பலரும் ஒன்றுபட்டுக் கலந்து சிறப்பித்தனர்.

## ஜனாதிபதியிடம் முறையிட்டது தவறு

யாழ்ப்பாணம்,ஜன.20

மானிப்பாய் கோவில்பற்று பகுதியில் உள்ள அந்தணர் ஒருவரின் வீட்டில் இடம்பெற்ற பிறந்தநாள் கொண்டாட்டத்துக்கு படையினரின் அனுமதி தேவை என்பது தொடர்பில் ஜனாதிபதியின் இந்து கலாசார அலுவல்கள் இணைப்பாளர் பாபு சர்மா ஜனாதிபதியிடம் முறையிட்டது தவறானது என்று பலாலி படைத்தலைமையகம் தெரிவித்துள்ளது.

இது தொடர்பாகப் பலாலி படைத் தலைமையகம் அனுப்பியுள்ள செய்திக்குறிப்பில்,

இந்த விடயம் தொடர்பாக பலாலிப் படைத் தலைமையகம் மேற்கொண்ட விசாரணையின்போது அவ்வாறான சம்பவம் எதுவும் இடம்பெறவில்லை என்பது தெரியவந்தது.

# இணையத்தளங்களுக்கு புதிய சில விதிமுறைகள்

கொழும்பு,ஜன.20

இலங்கை அரசின் உத்தரவுக்கமைய பதிவு செய்யப்பட்ட இணையத்தளங்கள் பின்பற்ற வேண்டிய விதிமுறைகள் குறித்து இலங்கையின் தகவல் ஊடகத் துறை அமைச்சு அறிவித்துள்ளது

இலங்கையில் தகவல் ஊடகத் துறை அமைச்சு 27 இணையத் தளங்களுக்கு மாத்திரமே செயற்படுவதற்கான அனுமதிப்பத்திரத்தை இதுவரையில் வழங்கியுள்ளது.

செய்திகளை வெளியிடும் இந்த இணையத்தளங்கள் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் குறித்து நேற்று முன்தினம் அறிவித்துள்ள தகவல் ஊடகத்துறை அமைச்சு, இதற்கமைய இணையத்தளங்கள் செயற்பட வேண்டும் என்றும் வலியுறுத்தியுள்ளது.

**இணையத்தளங்களுக்குப் பொறுப் பான ஆசிரியர்களும், ஊடகவியலாளர் களும் தாங்கள் வெளியிடும் செய்தி, தகவல்கள் நூற்றுக்கு நுறு வீதம் உண்மையானது என்பதை உறுதிப்படுத்த வேண்டும்.**

இணையத்தளங்களுக்காக வகுக்கப்பட்டுள்ள விதிமுறைகளில் முக்கிய மானவை சில.

இணையத்தளங்களுக்குப் பொறுப்பான ஆசிரியர்களும், ஊடகவியலாளர்களும் தாங்கள் வெளியிடும் செய்தி, தகவல்கள் நூற்றுக்கு நுறு வீதம் உண்மையானது என்பதை உறுதிப்படுத்த வேண்டும்.

இணையத்தளத்தில் சேர்த்துக்கொள்ளும் படம் மாற்றி வடிவமைக்கப்படலாகாது. இணையத்தளத்தின் ஆசிரியர் ஒரு தவறான செய்தியை வெளியிட்டோம் என்று தெரிந்து கொண்டால் அதைத் திருத்தி மீண்டும் செய்தியில் சேர்த்துக் கொண்டு இதனால் பாதிக்கப்பட்டவரிடம் மன்னிப்பும் கேட்க வேண்டும்.

ஒரு செய்தி தொடர்பாக இதனால் பாதிக்கப்பட்டவர்கள் தங்கள் நிலைப்பாட்டை இணையத்தளத்திற்கு தெரிவிப்பதற்கு நியாய பூர்வமான சந்தர்ப்பத்தை அளிக்க வேண்டும். ஒருவரின் மதிப்புக்கும், உணர்வுக்கும், இரகசியத்தன்மைக்கும் ஏற்புடைய வகையில் இணையத்தளங்கள் நடந்து கொள்ள வேண்டும்.

சமூகப் பிரச்சினைகளை பொறுத்தவரை வன்முறைகள், கலவரங்கள், போதைப்பொருள் பாவனை, சித்திரவதை, மற்றவர்களை வேதனைப்படுத்தி இன்பம் காணுதல், பாலியல் ரீதியிலான தரக்குறைவான படங்களையும் தகவல்களை வெளியிடாமல் இணையத்தளங்கள் அவதானமாக செயற்பட வேண்டும். ஒருவரின் தனிப்பட்ட வாழ்க்கை, குடும்பம், அவரது இல்லம், அவரது உடல்நிலை பற்றிய செய்திகளை வெளியிடுவதையும் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

சிறுவயதினர் தமது பாடசாலைக் காலத்தை மகிழ்ச்சியுடன் கழிப் பதற்கு அநாவசியமான இடை யூறுகளை ஏற்படுத்துவதை தவிர்த்துக் கொள்ளவேண்டும்.

தொலைத்தொடர்பு ஒழுங்கு படுத்தும் ஆணைக்குழு தடை செய்த இணையத்தளங்கள் மற்றும் நீதிமன்றத்தின் உத்தரவின்படி தடைசெய்யப்பட்ட இணையத் தளங்கள், தரங்குறைந்த பாலியல் உணர்வைத் தூண்டும் படங்களைப் பிரசுரிக் கும் இணையத்தளங்களுடன் எவ்வித தொடர்பும் இருத்தலாகாது.

## "யாழ்ப்பாணம் வரவேற்கிறது" பொறுப்பேற்குமா மாநகரசபை?

### முன்னாள் ஆணையாளர் கேட்கிறார்



யாழ்ப்பாணம், ஜன.20

''யாழ்ப்பாணம் வரவேற்கிறது'' வளைவை மீள் நிர்மாணம் செய்யும் போது அதே இடத்திலேயே நிர்மாணிக்கும் பொறுப்பை யாழ்.மாநகரசபை மேற்கொள்ள வேண்டும் என்று முன்னாள் மாநகர ஆணையாளர் சீ.வீ.கே. சிவஞானம் கோரிக்கை விடுத் துள்ளார்.

தற்போது ஏ-9 வீதியை அகலிக்கும் பணிகள் துரித கதி யில் நடைபெற்று வருகின்றன. அவ்வாறு அகலிக்கும் போது யாழ்ப்பாணத்தின் நுழைவாயிலான செம்மணிப் பகுதியில் ''யாழ்ப்பாணம் வரவேற்கிறது'' வளைவினை உடைக்க வேண்டியிருப்பதாக வீதி அபிவிருத்தி அதிகார சபையினர் தெரிவித்துள்ளனர்.

இந்த நிலையில் 1969 ஆம் ஆண்டு அப்போதைய யாழ். மாநகர முதல்வராக இருந்த சி.நாகராசா என்பவரால் ''யாழ்ப்பாணம் வரவேற்கிறது'' வளைவு நிறுவப்பட்டு 40 வருடங்களாக நிலைபெற்றுள்ளது.

யாழ்.நகரின் வீதி முடிச்சான தந்தை செல்வா நினைவுத் தூபிக்கு முன்பாக ஏ-9 வீதி நிறைவுறுவதை கருத்தில் கொண்டு இந்த வளைவு நிர்மாணிக்கப்பட்டது. அத்துடன் கண்டி வீதியில் இருந்து ஆரம்பிக்கும் செம்மணி வீதியும், யாழ். மாநகர எல்லைக்கு பருத்தித்துறை வீதியில் நிறை வடைவதுடன் செம்மணி வீதி கண்டி வீதிச் சந்திக்கு சிறிது தூரம் தள்ளியே நிர்மாணிக்கப்பட்டது.

அத்துடன் வளைவின் ஒரு பக்கத் தூண் வலி-கிழக்கு பிரதேச சபை எல்லைப் பகுதியிலும் மற்றைய தூண் சாவகச்சேரி பிரதேச சபை எல்லைப் பகுதியிலும் அமைந்துள்ளன. வீதி அதிகார சபையின் கட்டுப்பாட்டுப் பகுதிக்குள்ளும் அமைக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

தற்போது மேற்கொள்ளப்பட்டு வரும் வீதி அகலிப்புப் பணி காரணமாக நல்லூர் பிரதேச சபைக்கு இழப்பீடாக பத்து லட்சம் ரூபாவைச் செலுத்தி தமிழர்களின் கலாசாரத்தை பிரதிபலிக்கும் வகையில் புதிய வரவேற்பு வளைவை அமைக்கத் தீர்மானிக்கப்படவுள்ளதாகவும், நல்லூர் இராசதானியின் அடையாளங்களையும் மையப்படுத்தி இந்த வளைவு அமைக்கப்படவுள்ளதாகவும் தகவல்கள் வெளியாகியுள்ளன. இந்த நிலையில் அதனை மீள் நிர்மாணம் செய்யும் போது வரலாறுகளை மழுங்கடிக்கச் செய்யாமல் பழைய இடத்திலேயே நிர்மாணம் செய்ய வேண்டும்.

நல்லூர் பிரதேச சபை மேற் கொள்ளும் இந்தப் பணியை பழைய இடத்தில் நிர்மாணிக்கும் பொறுப்பை யாழ். மாநகர சபை பொறுப்பேற்க வேண்டும் - என்றும் அவர் தமது கோரிக்கையில் தெரிவித்துள்ளார்.



விடுதலைப் புலிகளின் முன்னாள் ஆயுத முகவரும் தற்போது அரசின் காவலில் இருப்பவருமான கே.பி. என்கிற குமரன் பத்மநாதன் யாழ்ப்பாணத்தில் பொங்கல் விழாவை கொண்டாடினார். பருத்தித்துறை, இன்பருட்டியில் உள்ள 'நேர்டோ' அமைப்பின் அலுவலகத்தில் நடைபெற்ற பொங்கல் நிகழ்வில் கலந்து கொண்டு பொங்கி உண்ட கே.பி, பிற்பகல் ஒரு மணியளவில் மீனவர்களுக்கு படகு வழங்கும் நிகழ்விலும் கலந்து கொண்டார். அங்கு 25 மீனவர்களுக்குப் படகுகள் வழங்கப்பட்டன.

## யாழ். ரயில் பாதைப் புனரமைப்பை ஆரம்பிக்காமல் திரும்பினார் கிருஷ்ணா

யாழ்ப்பாணத்துக்கு கடந்த செவ்வாய்க்கிழமை வருகை தந்த இந்திய வெளிவிவகார அமைச்சர் எஸ்.எம். கிருஷ்ணா யாழ். ரயில் நிலையத்தில் ரயில் பாதைப் புனரமைப்புப் பணிகளை ஆரம்பித்து வைப்பார் என எதிர்பார்க்கப்பட்ட போதும் அவர் அந்தப் பக்கமே தலை காட்டவில்லை.

இந்தியாவின் உதவியுடன் ஓமந்தை - யாழ்ப்பாணம் ரயில் பாதை புனரமைப்பு நடைபெறவுள்ளது. இதற்கான ஆரம்ப நிகழ்வு யாழ். ரயில் நிலையத்தில் நடைபெறும் என்றும் அதனை இந்திய வெளிவிவகார அமைச்சர் கிருஷ்ணா ஆரம்பித்து வைப்பார் என்றும் தெரிவிக்கப்பட்டிருந்தது. இதனை அடுத்த ரயில் நிலையம் கடந்த சில வாரங்களாகத் துப்பரவு செய்யப்பட்டு இந்த நிகழ்வுக்கான ஆயத்தப்பணிகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன. புனரமைப்புப் பணிகளை கிருஷ்ணா ஆரம்பித்து வைப்பார் என்ற நோக்குடனேயே இந்தப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன.

எனினும் நேற்றுமுன்தினம் யாழ்ப்பாணம் வந்த கிருஷ்ணா யாழ். ரயில் நிலையப் பக்கமே செல்லவில்லை. புனரமைப்புப் பணிகளை ஆரம்பித்து வைக்கும் நிகழ்வும் இடம்பெறவில்லை. அன்றைய தினம் அந்தப் பகுதிக்கு பொலிஸ் காவலும் போடப்பட்டிருந்தது. இது குறித்து ரயில்வே திணைக்கள அதிகாரிகளிடம் கேட்டபோது,

அமைச்சர் கிருஷ்ணா இதில் கலந்து கொள்வார் என முன்னர் தெரிவிக்கப்பட்டிருந்தது. எனினும் அவர் அங்கு



வரவில்லை. அதற்கான காரணம் தெரியவில்லை. அமைச்சர் உத்தியோகபூர்வமாகப் பணிகளை ஆரம்பித்து வைக்காவிட்டாலும் புனரமைப்புப் பணிகள் முன்னெடுக்கப்பட்டுள்ளன. இந்திய நிறுவனம் ஒன்று யாழ். ரயில் நிலையத்தில் இதற்கான பணிகளை ஆரம்பித்துள்ளது. பணியாளர்கள் தங்குவதற்கான இடம் ஒன்றும் அங்கு அமைக்கப்பட்டுள்ளது. - என்று தெரிவித்தனர்.